229

REGD. No. M. 1190.





# ஆனந்த போதினி

# ANANDA BODHINI.

Vol. 29. பொருளடக்கம். No. 4.

சுபானு௵ ஐப்பசிமீ௳ கூ

உள்ளடக்கம். பக்கம்











# மதிமோச விளக்கம்

(தூசி. இராஜகோபால பூபதி அவர்கள் இயற்றியது.)

தருமமே தழைத்தோங்கி வளர்ந்துவந்த மகா புண்ணிய பூமியாகிய நம் பரத கண்டத்தில், கலிகாலந் தொடங்கியதிலிருந்து, மனிதர் காலவயப்பட்டு, மன மாறுபட்டுத் தருமத்தில் செலுத்தும் சிந்தையை மிகுதியும் அதர்மத்தில் செலுத்தி வருவதால் அறநெறி குறைந்து மறநெறி வளர்ந்து வருகின்றது. அதற்கேற்ப வஞ்சமும் சூதும், பஞ்சமாபாதகமும், அவற்றிற் கஞ்சா நெஞ்சமும் படைத்த மனிதரே நாள்தோறும், நாடுகள்தோறும், ஊர்தோறும், வீடுகள்தோறும் மலிந்து விநோதம், விநோதமான படுமோசம், மதிமோசம், நிதிமோசங்களையும், சூது வஞ்சனைகளையும் செய்து வருகின்றனர். காலம் செல்லச் செல்ல இதற்குமுன் கண்டும், கேட்டுமிராத எண்ணிறந்த மோசநாசச் செயல்கள் எங்கும், என்றும் நூதனம் நூதனமாகத் தோன்றி அதியற்புதத்துடன் வளர்ந்துகொண்டே வருகின்றன; அவற்றைச் செய்யும் மனிதர்களும் உற்பாத பிண்டங்களாய் ஒருவரை யொருவர் எடுத்து விழுங்குவோராய் அற்புதமாக உற்பவித்து மலையை விழுங்கிய மகாதேவன்போல வளர்ந்து சிறந்து ஜெகஜாலப் புரட்டர்களாயும், அண்டப் புரட்டராயும், திடீர்ப் புளுகராயும் பரவி வருகின்றனர். இவர்களுடைய மகாமோசச் செயல்களால் சூது வாதறியாத உலகத்தார் அடையும் கஷ்ட நஷ்டங்களுக்களவேயில்லை. வியாபாரத்தொழில் முழுவதிலும் மோசம்; விவசாயத்திலும் மோசம்: உத்தியோகத் துறைகளிலும் ஒப்பில்லா மோசம்; வித்தையிலும் மோசம்; வேடிக்கையிலும் மோசம்; வைத்தியத்திலும் மோசம்; மாந்திரீகத்திலும் மோசம்; சோதிடத்திலும் மோசம்; சோற்றுக்கடையிலும் மோசம்; கப்பலிலும் மோசம்; ரெயிலிலும் மோசம்; நீதிச்சபைகளிலும் மோசம்; தேசச்சேவையிலும் மோசம்; கோயிலிலும் மோசம்; குளத்திலும், வீட்டிலும் மோசம்; காட்டிலும் மோசம்; நாட்டிலும் மோசம்; நகரத்திலும் மோசம். இப்படியே மனிதர் தலைநீட்டு மிடங்களெல்லாம் மோசமாகவே யிருக்கின்றன. இப்படிப்பட்ட மோசங்களிலிருந்து தப்பிப் பிழைப்பதற்கான நீதிமதிகள் இதில் விரிவாக விளக்கப்பட்டிருக்கின்றன,

**இதன் விலை ரூபா 1—0—0.**

# இரத்தினபுரி இரகசியம்

இதில் மிக்க ஆச்சரியமும், நெஞ்சு திடுக்கிடக்கூடியவையும், ஆதிமுதல் அந்தம் வரையில் மனதைக் கவரக்கூடியவைகளுமான சம்பவங்கள் நிறைந்துள்ளன. அநேக நீதிகளும், புத்திமதிகளும் தக்க திருஷ்டாந்த பூர்வமாக நிரூபிக்கப்படுகின்றன. நமது சிறுவர், சிறுமிகளும், ஸ்திரீகளும் அவசியமாய் உணரவேண்டிய இலௌகிக ஆசார விஷயங்களைப்பற்றி ஆங்காங்கு விளக்கிக் கூறப்பட்டிருக்கிறது.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1-ம் பாகம் விலை ரூ. | | 1—12—0 | 6-ம் பாகம் விலை ரூ. | | 1—10—0 |
| 2-ம் | ,, | 2— 4—0 | 7-ம் | ,, | 2— 4—0 |
| 3-ம் | ,, | 2— 0—0 | 8-ம் | ,, | 2— 4—0 |
| 4-ம் | ,, | 2— 0—0 | 9-ம் | ,, | 2— 0—0 |
| 5-ம் | ,, | 2— 0—0 | 9 பாகம் கொண்டது | | 18— 2—0 |

# அர்ஜுனசிங்கும், சுந்தரும்

இது, ஓர் கவர்ச்சியான நாவல். இதில் இரண்டு துப்பறியும் நாவல்கள் அடங்கி யிருக்கின்றன. **இதன் விலை அணா 2.**

---

ஆனந்தபோதினி காரியாலயம், சௌகார்பேட்டை, சென்னை.

ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு."—திருவள்ளுவர்.

தொகுதி 29 | சுபானு௵ ஐப்பசிமீ கஉ 1943௵ அக்டோபர்மீ 18உ | பகுதி 4

## கடவுள் வணக்கம்.

உரியேன் அல்லேன் உனக்கு அடிமை
உன்னைப் பிரிந்து இங்கு ஒருபொழுதும்
தரியேன் நாயேன் இன்னதென்று அறியேன்
சங்கரா கருணை யினால்
பெரியோன் ஒருவன் கண்டுகொள் என்றுஉன்
பெய்கழல் அடிகாட்டிப்
பிரியேன் என்றுஎன்று அருளிய அருளும்
பொய்யோ எங்கள் பெருமானே. (1)

என்பேஉருக நின்அருள் அளித்துஉன்
இணைமலர் அடிகாட்டி
முன்பேஎன்னை ஆண்டுகொண்ட முனிவா
முனிவர் முழுமுதலே!
இன்பே அருளி எனை உருக்கி
உயிர்உண்கின்ற எம்மானே!
நண்பே அருளாய் என்உயிர் நாதா!
நின்அருள் நாணுமே! (2)

பத்திலனேனும் பணிந்திலனேனும் உன்உயர்ந்த
பைங்கழல் காணப்
பித்திலனேனும் பிதற்றிலனேனும்
பிறப்பறுப்பாய் எம்பெருமானே!
முத்தனை யானே! மணியனை யானே!
முதல்வனே! முறையோ என்று
எத்தனை யானும் யான்தொடர்ந்து உன்னை
இனிப்பிரிந்து ஆற்றேனே. (3)




# இன்றைய நிலையில் தீபாவளி!

---

ஐப்பசி மாதம் தீபாவளி மாதமாகும். தைப் பொங்கலைப் போன்று தீபாவளி நம் நாட்டின் தேசீயத் திருநாளாகும். ஆகவேதான், தீபாவளியை இந்தியா முழுதும், இந்துக்களேயல்லாது கிறிஸ்தவர்கள், முகம்மதியர்கள், பார்ஸிக்காரர்கள், ஜெயினர்கள், பௌத்தர்கள் முதலிய பிற மதஸ்தர்களும்கூடக் கொண்டாடுகிறார்கள்.

ஆனால், இத்தீபாவளிக்குப் புராண சம்பந்தமான கதைகள் பல நம்மவர்களால் கூறப்படுகிறது. தீபாவளி என்றவுடனே, சாதாரண பாமர மக்களும் சொல்லும் கதையொன்று உண்டு. துவாபர யுகத்தில் நரகாசுரன் என்னும் கொடிய அரக்கனொருவன் இருந்து மக்களுக்குப் பலவிதமான துன்பங்களை அளித்து வந்தான். இவ்விதம் அவனால் ஏற்படும் நரகத் துன்பங்களைப் பொறுக்க முடியாமல் அனைவரும் இறைவனைத் துதித்தார்கள். துஷ்ட நிக்ரஹ, சிஷ்டபரிபாலனஞ் செய்வதற்கென்றே அவதரித்த ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா சத்தியபாமையோடு சென்று நரகாசுரனைக் கொன்றார். அவ்விதம் ஸ்ரீ கிருஷ்ணனின் பாணத்தினால் நரகாசுரன் இறக்கும்போது, "பரமாத்மா, என் பெயர் இப்பூவுலகில் நிரந்தரமாக இருக்கும்படியாக, மக்கள் எனது மரண நாளைக் கொண்டாடுமாறு செய்யவேண்டு" மென்று பிரார்த்தித்துக் கொண்டான். பரமாத்மா அப்படியே வரந் தந்தார். அதை யனுசரித்துத்தான் மக்கள் 'நரக சதுர்த்தி' என்று கூறி வருஷந் தோறும் தீபாவளியைக் கொண்டாடுகிறார்கள்.

இது சாதாரணமாக, தீபாவளிக்கு எல்லோரும் சொல்லும் கதை யானாலும், உண்மையல்ல. விஷ்ணு புராணம் முதலிய புராணங்கள் வேறுவிதமாக கூறுகின்றன. முன்னொரு காலத்தில் தேவர்களும் அசுரர்களும் அமிர்தம் பருகி

அமரத்துவத்தை யடைய ஆசை கொண்டு மேரு மந்திர மலையை மத்தாக இட்டு, வாசுகி என்னும் பாம்பைக் கயிறாகக் கொண்டு பாற்கடலைக் கடைந்தனர், இவர்கள் கொண்ட அகம்பாவங் காரணமாக, முதலில் ஆலகால விஷம் தோன்றி சுரர், அசுரர்களைப் பீதி கொள்ளச் செய்தது. சிவபெருமான் அவ் விஷத்தை யுண்டு இவர்களுக்கு அபயம் தந்தார். பின்னர், அமிர்தம், சந்திரன், காமதேனு, கற்பகத்தரு முதலியன வெல்லாம் உண்டாயின. கடைசியாக, மகாலக்ஷ்மி தோன்றினள் அல்லவா? அந்தத் திருமகளை மகாவிஷ்ணு மனைவியாக ஏற்றுக் கொண்ட விஷயம் எல்லாரும் தெரிந்தது. மகாலக்ஷ்மி மகாவிஷ்ணுவுக்கு மணமாலை சூட்டியதும், அச் சமயம், மண்ணுலகையும், விண்ணுலகையும் தன் கொடிய கோரச் செயல்களால் அதஞ் செய்து வரும் நரகாசுரனைக் கொன்று, அவன் சிறைப்படுத்தி வைத்திருக்கும் தேவமகளிரையும் கந்தருவப் பெண்களையும் விடுதலை செய்ய வேண்டுமென்று வேண்டிக் கொண்டாள். பெருமானும் திருவுளங்கொண்டு நரகாசுரனைச் சம்ஹரித்தார். தேவர்களுக்கும், மனிதர்களுக்கும் சுதந்திரம் கிடைத்து, சுபிட்சம் ஏற்பட்டது. அவ்விதம், நரகாசுரன் என்னும் அரக்கனால் ஏற்பட்ட மகிழ்ச்சியையே, மக்கள் தீபாவளித் திருநாளாகக் கொண்டாடுகிறார்கள். ஏனென்றால், நம் நாட்டில் தீபத்தை—திருவிளக்கைக் கூட—லக்ஷ்மியாகப் பாவித்து வணங்குவது வழக்க மல்லவா! ஆகவே, தான் லக்ஷ்மி அவதரித்து திருமாலைத் திருமணஞ் செய்து கொண்டு நரகாசுரனை ஒழித்த நாளை, மக்கள் தீபங்களை வரிசையாக ஏற்றி வைத்து வணங்கி, லக்ஷ்மி நாராயணரைத் துதித்து திருவருள் பெற முயல்கிறார்கள்.

இந்தத் தீபாவளித் திருநாள் தமிழ் நாட்டில் மட்டுமல்லாமல், இந்தியாவின் மற்ற பாகங்களிலும் கொண்டாடப் படுகிறது என்று சொன்னோ மல்லவா! வட இந்தியாவில் இத் தீபாவளியைப் பிரமாதமாகக் கொண்டாடுகிறார்கள், மார்வாரி, குஜராத்தி, வங்காளிகளுக்கு இத் தீபாவளித் திருநாள் வருஷப்பிறப்பு தினமாகவும் இருக்கிறது.

இவ்விதம் புராணக் கதைகளே யல்லாமல், தீபாவளியின் பெயரால், சரித்திரக் கதைகளும் வழங்கப்படுகின்றன. தீபாவளி நமது தேச சரித்திரத்தை யநுசரித்து ஏற்பட்ட ஒரு திருவிழா என்பது சில அறிஞர்களது அபிப்பிராயம். இந்தியாவை, இப்போது, ஆங்கிலேயர்கள் ஆக்கிரமித்து அரசாண்டு வருவதுபோல, இதற்கு முன் பல அந்நிய நாட்டினர் படையெடுத்திருக்கிறார்கள். முகம்மதியர்கள் நம் தேசத்தைக் கைப்பற்று

வதற்குமுன் 'ஹூணர்'கள் (Huns) என்ற ஒரு சாதியார் (நாட்டார்) இந்தியாவின் மீது படையெடுத்தனராம். அவர்கள் நம் நாட்டுச் செல்வங்களையும், உடைமைகளையும் சூறையாடிக் கவர்ந்ததோடு, நாட்டின் வளத்தையும் கெடுத்துவிட்டார்கள். மக்களைப் பல விதமாகக் கொடுமைப் படுத்தலாயினர். வட நாட்டில் ஆண்டுவந்த 'விக்கிரமாதித்தன்' என்ற ஒரு பெரிய அரசர் ஹூணர் செய்து வரும் கொடுமைகளைக் காணச் சகியாது, அவர்களை விரட்டி யடிக்கத் துணிந்தார். ஆகவே, அவர் நம் நாட்டு மக்களை யெல்லாம் ஐக்கிய முன்னணிப் படைபோல ஒற்றுமைப் படுத்தி வில் வித்தை, வாள் வித்தை யெல்லாம் கற்றுக் கொடுத்துத் திரட்டிச் சென்று ஹூணர்கள் மீது யுத்தம் தொடுத்தார். நம் நாட்டு மக்கள் பலவிதமான பாணங்களை எய்து ஹூணர்களைத் தாக்கிப் போரில் புறமுதுகிட்டு ஓடச் செய்தனர். கடைசியாக, அவர்கள் ஹூணர்களை இந்தியாவை விட்டே துரத்திவிட்டனர். இவ்விதம் விக்கிரமாதித்தன் வாயிலாக, நம் நாட்டு மக்கள் ஹூணர்கள் என்னும் அன்னியர்களின் அதிக்கிரம ஆதிக்கத்தி லிருந்தும், கொடுமையி லிருந்தும் விடுபட்டதால், அச்சுதந்திர தினத்தையே தீபாவளித் திருநாளாகக் கொண்டாட லாயினர். இவ்விதம் அன்னியர்களை வெற்றி கொண்டு, சுதந்திரத்தைப் பெற்றதனால், அஷ்டலக்ஷ்மியின் அருளையே வேண்டி தீபத்தின் மூலமாகத் திருமகளை வழிபடலாயினர். யுத்தத்தில் நம் நாடு பெற்ற வெற்றியை, வாண வெடி முதலியவைகளை எரித்து மகிழ்ச்சி கொண்டாடினர். விக்கிரமாதித்த சகாப்தமே தீபாவளித் திருநாள் தொடக்கம் என்பதும், இச் சரித்திர உண்மையை மறந்து, புராணக் கதைகளும், தத்துவார்த்தங்களும் பிற்காலத்தில் எப்படியோ பரவிவிட்டன என்பதும் டாக்டர் திருமூர்த்தி போன்ற அறிஞர்களது அபிப்பிராயம்.

ஆனால், இன்றைய நிலை என்ன? இன்று நம் நாடும், மக்களும் உள்ள நிலையில், தீபாவளி கொண்டாடலாமா? கொண்டாடவேண்டியது அவசியமா? மேற்குறிப்பிட்ட புராணக் கதைகள், சரித்திரக் குறிப்புக்களின்படி பார்த்தால், நாம் எல்லாம் தீபாவளியைக் கொண்டாடுவதே அர்த்தமற்றதாகும். ஏனென்றால், நம் நாடு அன்னியர் ஆதிக்கத்திற்குட்பட்டு அடிமைத்தனத்தில் ஆழ்ந்திருக்கிறது. நம் மக்கள் சுதந்திரமின்றி தவிக்கின்றனர். அதன் பயனாக, நாட்டில் வறுமை—தரித்திரம் தாண்டவமாடுகிறது. மக்களை அறியாமை சூழ்ந்திருக்கிறது. போதாக் குறைக்கு நம் நாடு சென்ற நான்கு வருஷங்களாக, யுத்த அரக்கனது கொடுமைக்கு ஆளாகித் துன்புற்ற

வருகிறது. யுத்த நெருக்கடியின் எதிரொலியாக, அரசியல் நெருக்கடி ஏற்பட்டு நாட்டு நிர்வாகத்தில் பலவிதமான ஊழல்களையும், சீர்கேடுகளையும் உண்டுபண்ணியிருக்கின்றன. யுத்த நெருக்கடியும் அரசியல் நெருக்கடியும் சேர்ந்து, உணவுப் பொருள் நெருக்கடியை உண்டுபண்ணி மக்களை அல்லோகல்லோலப் படுத்தி வருகின்றன. இவ்விதமாக, இன்றுள்ள நிலைமையை ஏட்டில் விவரிக்க முடியாது.

இந்நிலையில் நம் நாட்டு மக்கள் தீபாவளியை எப்படி மகிழ்ச்சியாகக் கொண்டாட முடியும்? 'நாம் உண்ணும் உணவுக்கும் உடுக்கும் உடைக்கும் படும் கஷ்டத்தில் தீபாவளி வேறு வேண்டி யிருக்கிறதா?'' என்றே பெரும் பாலார் அயர்ச்சியுறுவர் என்பது திண்ணம். ஏதோ நிர்ப்பந்தமாக, மாப்பிள்ளை மார்களுக்குச் சீர்சிறப்பு செய்ய வேண்டியவர்கள் எவ்வளவு கஷ்டத்திலும் சம்பிரதாயத்தை யொட்டி, தீபாவளியைக் கஷ்டத்தோடு கொண்டாடுவரே யொழிய, மற்றவர்கள் இதற்குமுன்போல சந்துஷ்டியாகக் கொண்டாட மாட்டார்கள். பண முள்ளவர்களுக்கோ தீபாவளி தினமட்டுமல்ல; எல்லா நாட்களும் தீபாவளிதான்.

ஆகவே, நம் நாட்டில் இன்று நிலவியுள்ள யுத்த நெருக்கடி, அரசியல் நெருக்கடி, உணவுப் பொருள் நெருக்கடி ஒழியாமல், நம் மக்கள் தீபாவளியை மகிழ்ச்சியாகக் கொண்டாடுவதற்கில்லை. நம் தேசத்தில் மக்களைப் பீடித்துள்ள வறுமை, அஞ்ஞானம், அதர்மம் முதலிய பீடைகள் ஒழியாமல், முக்கியமாக, அடிமைத்தனம் ஒழியாமல், தீபாவளித் திருநாள் சிறப்புறாது. ஆனால், நீண்டகால வழக்கத்தை விடாமல், நாம் இப்போது நம் நாட்டையும் மக்களையும் பீடித்து வாட்டி வரும் சகல பீடைகளையும் ஒழித்து, சர்வமங்கள முண்டாகச் செய்யுமாறு மகாலக்ஷ்மியை வழிபடும் முறையில் தீபாவளியைச் சாதாரணமாகக் கொண்டாடுவோமாக!



# தெய்வமாகப் போற்றுவது எப்போது?

(எல். வி. எஸ். மணியன்))



'நெருப்பின்றி புகை தோன்றுமா ? ஒருக்காலும் தோன்றாது. திருத்தக்க தேவரும், குமர குருபர சுவாமிகளும் பாடி யிருப்பதில் உண்மை யுண்டா இல்லையா என்பதை நன்கு துழாவிப் பார்க்க வேண்டும். அதுவன்றி, அவர்கள் துறவிகள்; மகளிருக்கு சமத்துவத்தை தரவிரும்பாத ஒரு சில சுயநலப் புலிகளது போலிக் கொள்கைகளை அடிப்படையர்கக் கொண்டு பாடி யிருக்கிறார்களென்று வாதித்தால், பாரதியாரும் திருவள்ளுவரும் மேற் கூறிய போலிக் கொள்கை யுடையோரின் எதிரிகளின் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு பாடினார்கள் என்று வாதிக்க முடியாதோ ?

நிற்க,

உலகத்தில் வாழ்க்கையில் என்ன நிகழ்கிறதோ அதை அப்படியே திட்டுவதினால் ஏற்படக்கூடிய விபரிதங்களை பாரதியாரையும், வள்ளுவனாரையும் போன்றோர் நன்கு அறிந்து சித்திரிக்காமல், பெண்களுக்கு உயர்வைக் கொடுத்து நல்வழிக்குக் கொணர எண்ணினர் என ஏன் நாம் கருதக் கூடாது ?

ஆனால் உலகை முற்றுந் துறந்த துறவிகளோ பெண்களிடம் உள்ள குறைகளை எடுத்துக் கூறினால் பெண்கள் அக்குறைகளை போக்கிக் கொள்ள முற்படுவர் என்று கருதினர் போலும்.

இருதரப்பினரது கூற்றுகளையும் சீர்தூக்கிப் பார்த்தல் அவசியம். ஒரே சார்பில் வாதிப்பது பிசகு. 'குருடர்களும் யானையும், என்ற கதையில் நாம் படித்தது போல் பார்க்கப் போயின் யாவும் உண்மை. ஒரு நாணயத்திற்கு 'இரண்டு' பக்கங்களுள்ளன என்பதை நண்பர் 'துரை' யவர்கள் அறியவேண்டும். ஆதலால் இரு தரப்பினையும் அலசிப் பார்த்தல் அவசியம்.

தமிழ் மறையை அருளிய வள்ளுவனார் பெண்களைத் தெய்வமாகப் போற்றுவது போல உலகத்தோர் பெண்களைத் தெய்வமாக வழிபட வேண்டு மென்பது ஒப்புக்கொள்ள வேண்டிய விஷயமே. ஆனால், **எப்போது ?**

தற்பொழுது நம் கண் முன்னிருக்கும் உலகினிலே பெண்கள் எத்துறையில் ஆண்களைப் போல் சமத்துவத்தைப் பெறு திருக்கிறார்கள் ? கல்வித் துறையிலா ? அரசியலிலா ? எதில் ?

எத்தனை **M. A.** பட்டமும் **B. A.** பட்டமும் பெற்ற பெண்கள் வேண்டும் ? எத்தனை உபாத்தியாயினிகள், எத்தனை டைபிஸ்டு

கள் வேண்டும் ? எத்தனை பெண்கள் வக்கீல்களாக இல்லை. ஏன் ? மந்திரியாகக்கூட ஒரு பெண்மணி யிருந்தாரே ! இதெல்லாம் சமத்துவ மில்லையோ ?

இங்ஙனம், ஆண்களுக்கு இணையாகப் பல துறைகளிலும் சமத்துவம் பெற்ற மகளிர் யாவரும் ஒருவரைப்போல் எல்லோரும் இருக்கிறார்களா ? ஐந்து விரல்களும் ஒன்றைப் போலவா இருக்கின்றன ? இல்லையே !

'யானை தன் தலையில் தானே மண்ணை வாரிப் போட்டுக் கொள்ளுதல்' போல், நாம் மகளிரைப் பழிக்க மகளிரே தான் காரணம் என்று கூறுவேன். சமத்துவம் கொடுக்கப் பெற்றதும் அதை அவர்கள் எங்ஙனம் காப்பாற்றிக் கொள்வது என்று அறிவதில்லை. 'குரங்கு கையில் கொடுத்த பூமாலை' போலாகிறது, அவர்கள் பெற்ற சமத்துவம் அவர்கள் கையில். 'காவல் தானே பாவையர்க்கு அழகு' என்பது அறவே மறக்கப்படுகிறது. இதுகாறும் பிற ஆடவரை ஏறெடுத்தும் பார்க்காது, பெண்களுக்குரிய அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்ற நால் வகை குணங்களுடன் கற்புநெறி தவறாது, படிதாண்டா பத்தினிகளாய் இருந்தவர்கள், அவர்கள் கடமையை, நெறியை விட்டு வழுவ இந் நாகரிக உலகிலே பல சந்தர்ப்பங்கள் கிடைக்கின்றன. வழுவுகின்றனர். அதனால் என்ன நேருகிறது ? சீரும், சிறப்புமா யிருந்த அவர்கள் பிறந்த குடிக்கும், புகுந்த குடிக்கும் இருந்த நற் பெயருக்கும் ஹானி யுண்டாகிறது. அப்போதுதான் நம் பழிச் சொல்லுக்கு ஆளாகின்றனர் பேதை மகளிர். இதுதான் உலகில் இப்பொழுது பெரும்பாலும் நாம் காண்பதும், கேட்பதும். இதை யாரும் மறுக்க முடியாது. ஆனால், கற்பு நெறி தவறாது பிறந்த இடத்திற்கும் புகுந்த இடத்திற்கும், மற்றும் பெண்கள் குலத்திற்கே தனிச் சிறப்பை கொடுக்க வல்ல மகளிரை இன்றல்ல, நாளையல்ல; என்றும் கண்ணகியைப் போல தெய்வமாகக் கொள்ள இப் பரத கண்டம் தயாரா யிருக்கிறது.

மனுமுறை வழுவாது அரசு செலுத்திய மன்னர்களின் சந்ததியில், ஒரு கொடுங்கோ லரசன் தோன்றின், அவனைக் கொடுங்கோலன் என்னாது, செங்கோலன் என்று போற்றுதல் கூடுமோ ?

அங்ஙனமே, கண்ணகி போன்ற கற்பரசிகள் உதித்த பெண் குலத்திலேயே பிறந்திருப்பினும், கற்பு நெறி தவறிய மகளிராக இருந்தால் அவர்களைப் பழித்தலே யல்லால் வழிபட இயலுமோ ?

காவலரைக் கட்க்காத (நளாயினியை யொத்த) ஒரு பெண்ணினால், பெண்ணுலகிற்கே, பெயரும் புகழும் உண்டாவதானால், நெறி தவறிய ஒரே மங்கையால் அவள் பிறந்த பெண்ணுலகிற்கு

பழிச் சொல்லும் இகழ்வும் ஏற்படுவது சகஜந்தானே! குடம் பாலானாலும், விஷம் ஒரு துளி போதாதோ?

*　　*　　*　　*

முதலிலேயே கூறிவிடுகிறேன். மேற்கூறிய விஷயங்களுக்கும் இனி கூறப்போவதற்கும் யாதொரு சம்பந்தமும் கிடையாது.

செய்யுளைக் கவனிப்போம்.

நண்பர் 'துரை' யவர்கள் செய்யுளின் பின்னிரண்டு அடிகளுக்கு பொருள் கூறுவதைக் கவனிப்போம். 'ஆனால் இப்பூமியில் பெண்ணாய்ப் பிறந்த எத்தகைய கற்பரசியையும், அவளுடைய அழகு கருதி விரும்பாத ஆண்மக்கள் இல்லை யாதலால் சந்தேகத்துக்கு இடந் தருகிறது! என்று கூறினாள் என்பது அவர் கொண்ட பொருள்.

ஆம், கற்புடைய ஒரு பெண்ணின் அழகு கருதி ஆண் மக்கள் விரும்பினால் அப் பெண்ணிற்கு, ஏன் தன் மனோ திடத்தைப் பற்றி சந்தேகத்திற்கு இடந்தர வேண்டும்? சந்தேகத்திற்கு இடந் தருவதானால் திடசித்த முடையவ ளல்ல, சபல சித்த முடையவள் என்று பொருள் படவில்லையா?

இவ் விரு அடிகளுக்கும் கடற்கரையில் கண்ட பெரியார் கூறிய பொருள் ஒரு சிறிது பொருந்தும். அவர் கூறியதை 'இவ் வுலகில் பிறந்த பெண்களுக்கு அநேகமாய், அவர்கள் விரும்பும் ஆடவர் கணவராய் வாய்ப்பதில்லை யாதலால், அவர்கள் மனதை நம்புவதற் கில்லை' என்று பொருள் கொண்டால் சற்று நன்கு விளங்கும்.

நண்பரும், நேயர்களும் என்னுடன் திரௌபதியின் சுயம்வர காலத்திற்குச் சிறிது வர வேண்டும்.

சுயம்வரம் என்றால் என்ன? சுயம்வரம் என்ற பெயரே தவிர தமயந்திக்கும், சம்யுக்தைக்கும் நடந்த சுயம்வரம் போலா திரௌபதிக்கு நடந்தது? துரோபதை தான் விரும்பியவரை மணந்தாளா? 'திரௌபதை மச்ச யந்திரத்தை வீழ்த்துபவருக்கு மாலையிடுவள்' என்று சுயம்வரத்திற்கு வந்திருந்தவர்களுக்குத் தெரிவிக்கப்பட்டதே யன்றி, மச்சயந்திரத்தை வீழ்த்துபவர் யாரானாலும் தான் அவரை கணவராக ஏற்றுக் கொள்வதாக துரோபதை ஒப்புக் கொண்டாளா? அவள் சம்மதத்தைக் கேட்டாருண்டா?

கேட்டிருப்பின் கன்னனைத் தான் காதலிப்பதாக கூறியிருக்கலாம். கணவனாகவும் கன்னனை அடைந்திருக்கலாம்.

இக் காரணங்களால் கன்னனைக் காதலிப்பதாக நான் கருதும் துரோபதை, பாண்டவர்களை மணந்த பின்னரும். கன்னனை உள்ளூரக் காதலித்தே வந்திருக்கிறாள். ஆனால், சமூகக் கட்டுத்

திட்டங்களுக்கு (இக் காலத்தைவிட, அக்காலத்தில் சமூகக் கட்டுத் திட்டங்களுக்கு சக்தி அதிக மாயிற்றே!) அடங்கியிருந்திருக்கிருள். மேலும், துரோபதை கன்னனைக் காதலித்தாளே தவிர, கன்னன் தன்னைக் காதலிக்கிருன் என்பதைத் துரோபதையறியாள். ஆகவே, கன்னன் தன்னழகைக் கண்டு மோகிக்கும் காலமும் வரின், தான் ஐம்புலன்கள் போன்ற ஐவரைப் பதிகளாகப் பெற்றிருப்பினும் நம்புவதற்கு உளதோ ? இல்லை, என்று வசிட்ட முனிவனது தருமபத்தினியான அருந்ததியை ஒத்த துரோபதையும் கூறினுள்' என்று நான் கருதுகிறேன்.

உருகும் எனது பேரிதயம்—என்பதற்கு ஒருக்காலும் என் உள்ளம் உருகாது என்பதல்ல பொருள். பேசும் படம், பெய்யும் மழை என்ற ரீதியில் என்னுடைய உள்ளம் உருகும் என்று பொருள் கொள்ள வேண்டும்.

'பேரிதயம்' என்றதற்கு வித்துவான். எம். சாம்பசிவமும் இரட்டை ஆர். ருக்மணியும் கூறிய பொருளும் தெளிவாயுள்ளபடியால் மேலும் விளக்க வேண்டிய அவசியமில்லை.

அருந்ததியைப் போன்ருள் என்று திரௌபதியைக் கூறுவது பொருந்துமா எனின், நன்கு பொருந்தும். பாண்டவர்களை மணந்த பின் வேறு யாரையேனும் மனத்தால் திரௌபதை நினைத்திருந்தால் அவள் கற்புக்கு பங்க மேற்பட்டது என்று கூறலாம். ஆனல் துரோபதை தான் ஐவரையும் பதிகளாக்க கொள்ளு முன்னரே, கன்னனைக் கணவனென வரித்து விட்டாளே ! ஆதலால் கன்னனை அயலான் என்று கூற முடியுமோ ? கன்னனுக்கு இடமளித்த இதயத்தில் தான் நிர்ப்பந்தத்தினல் ஐவருக்கும் இடமளித்தாள். இடமளித்த பின்னரும், தான் மனத்தால் வரித்த கணவனை மறந்தாளா ? கனவிலும் மறந்தாளில்லை. அது ஒரு கற்பரசியின் குண மல்லவா ? கன்னனை மறந்து போகா விட்டாலும், நிர்ப்பந்தத்தினல் பதிகளாகக் கொண்ட ஐவருக்கும் துரோகம் செய்தாளா ? ஒரு சிறிதும் செய்யவில்லை. ஐவருக்கும் தன் கடமைகளி லிருந்து கிஞ்சிற்றும் வழுவினளில்லை. அகத்திலேயேதான் அடங்கிக் கிடந்தது அவள் காதல். இப் பழச் சம்பவம் நேர்ந்திராவிடில் அவள் உள்ளத்தி லிருந்தது ஒருக்காலும் வெளி வரப் போவதில்லை. ஆதலால் துரோபதையைக் கற்பரசி யென்று கொள்ளாது வேறு விதமாக பொருள் கொள்வது ஒரு சிறிதும் பொருந்தாது என்பது என் எண்ணம்.

**'ஐம்புலன்களும் போல்'** எனச் செய்யுளிலேயே தெளிவாகக் கொடுத்திருப்பதால், மக்களுக்கு இன்றி யமையாததான மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐம்புலன்களெனக் கொள்ளாது வேறு பொருள் கொள்வது சரியாகப் பொருந்தாது என்பது என் அபிப்பிராயம்.

---

# கவிஞன் ஒரு பிரமனல்லவா!

(வி. செல்வராஜ்.)



**வா**னத்தை வேண்டுமென்றாலும், அளந்து விட்லாம், கவிஞனின் கற்பனையை மட்டும் அளந்துவிட முடியாது என்றே சொல்லுவேன். நஞ்சிலும் அமிர்தம் எடுப்பான், அமுதிலும் நஞ்சு காண்பிப்பான் தன் திறமையினாலே. எங்கும் நிறைந்த ஆண்டவனை ஒரு சிறு துரும்பாகவும், துரும்பைத் தூணாகவும் ஆக்கவல்ல ஆற்றல் கவிஞனுக்கே உண்டு. நீங்கள் கவனியாது காலாலே மிதித்துச் செல்லும் ஒரு சிறு பசும்புல்லை, உங்கள் முன்னே ஒரு பெரு வள்ளலாக மாற்றிக் காண்பித்து விடுவான். அது அவனின் ஜால வித்தையல்ல, மந்திர சக்தியுமல்ல. எல்லாம் அவனின் அளவிட முடியாத கற்பனை. அவனின் கற்பனையின் முன் இவ்வுலகம் ஒரு சிறு அணுவளவுதான். சாதாரண விஷயங்களையும் நாம் கூர்ந்து நோக்கி மகிழும்படி நம்மை மயக்கி விடுவான். அனேகமாக எல்லாவற்றையும் இனியவையாக காண்டலே அவனின் இயல்பு.

அதற்கு ஒரு சான்று இங்கே காண்போம். வயல்களிலே வண்டுகள் சுற்றித் திரிகின்றன. அதன் பக்கத்திலே உள்ள சோலையில் கிளிகள் பறக்கின்றன. அந்தப் பக்கமாக நாம் போக நேரிடுகின்றது என்று வைத்துக் கொள்ளுவோம். நாம் காண்பது இவற்றைத்தான். ஏன் அதுவுங் கூடக் கவனிக்கமாட்டோம் என்றே எண்ணுகிறேன். “ஏதோ இருந்தது, வயலுக்குப் பக்கலிலே மரங்களிருந்ததாக ஞாபகம்” என்று கூட சந்தேகத்தோடுதான் கூறுவோம். “அந்தத் திருட்டு ராஸ்கலைப் போய்ச் சொல்லுகிறேன். ஏய்த்துக்கொண்டே வருகிறான்” என்றாவது “வட்டியையாவது காலாகாலத்திலே கொடுத்து விட்டானால் சும்மா யிருக்கலாம்; பெரிய ஆசாமியாக வல்லவா இருக்கிறான்? பயல்” என்றாவது தான், அவ்வழியாகச் செல்லும் நாம் நம் வேலையைப்பற்றி எண்ணிக்கொண்டு செல்லுவோம். இதோ ஒரு கவிஞன் அவ்வழிச் சென்றான். அவன் பார்த்தவற்றைக் கூறுகின்றான் கவிரூபமாக.

பச்சைக்கம்பளம் விரித்தது போன்று வயல்கள் கண்ணுக்கெட்டிய தூரம் பச்சைப் பசேலென்று தோன்றுகிறது. தூரத்தே தெரியும் அடிவானமும் இப் பச்சை நிறத்தோடு கலந்து கலந்து தோன்றுகின்றது. இந்த அழகு பொருந்திய வயல்களிலே தேன் வண்டுகள் பண்ணிசைக்கின்றன. அதன் இன்னிசைதான் தேவ கானம்போல் கேட்பவரின் இதயத்தைப் புளகாங்கித மடைவிக்கின்றது. அதன் இனிய கானத்தை அந்த அத்துவானத்திலே யார் கேட்டு மகிழப் போகின்றார் என்று சந்தேகப்பட வேண்டாம். அதோ பற்பலவித வர்ணப்புடவைகள் அணிந்த இளம் பெண்க

ளாகிய பூக்கள் மனமிளகக் கேட்டுக்கொண்டிருக்கின்றனர். தங்கள் மனமாகிய இதழ்களை விரித்து வண்டுகளின் ரீங்காரத்தைக் கேட்டு ஆனந்தித்திருக்கின்றன.

சங்கித வித்வான் சாமார்த்தியமாக ஒரு ராகத்தை ஆலாபனம் செய்து முடித்தவுடன் என்ன செய்கிறோம். அவரின் சாமர்த்தியத்திற்கு மெச்சி, பரிசில் கொடுக்கின்றோம். பரிசில் அளிக்க முடியாதவர்கள் கையைத் தட்டியாவது உற்சாகப் படுத்துகிறோம். பூக்கள் என்ன நம்மிலும் தாழ்ந்தவைகளா என்ன? தேவமங்கைகளின் பிரதிநிதிக ளல்லவா அவைகள்? ரீங்கார கானம் தந்த வண்டுகளாகிய பாடகர்களுக்கு சரியான பரிசில் ஈய எண்ணின. பூக்களிடத்தில் உள்ள மதிப்புள்ள பொருள் எது? நம்மைப் போல் கேவலம் மெடல்களையாவது, பணத்தையாவது பரிசிலாக அவை கொடா! தன்னிடத்துள்ள மதிப்பான ஒன்றையே அவை ஈயும். ஆமாம். தன் விலைமதிப்பற்ற கடிமணத்தை வீசி அவ் வண்டுகளை தன்னிடத்தே தலையசைத்து அழைத்து வெகு நாட்களாக வெகு அருமையாகச் சேகரித்து வைத்திருந்த தேவாமுதம் போன்ற தன் தேனை அவைகளுக்கு நல்குகின்றது. வண்டுகளும் தங்கள் ரீங்காரத்தை மறந்தனவாய், பூக்களின் மடிகளிலே தங்கி, அங்கு எழுந்த தென்றலிலே, பூக்கள் மெல்லென தொட்டில்போல் ஆடிக் கொண்டிருக்கும் போதே அத்தேனை வயிறார உண்டு மகிழ்ந்து திரிகின்றன.

மேற்சொன்ன சங்கிதக் கச்சேரியைப்பற்றிக் கேட்டோம். அவ்வியற்கை எழிலிலே அங்கு மட்டும் அக் கச்சேரி நடந்து கொண்டிருந்ததாக எண்ணவேண்டாம். அதேபோல அவ் வயல்களை யொட்டிய ஒளிர் சோலையிலும் நடந்து கொண்டிருந்தது. ஒரே இடத்தில் ஒரே பாகவதரின் சங்கிதத்தையே கேட்டுக் கொண்டிருக்கவும் முடியாது. அப்பாடகர் என்னதான அருமையாகப் பாடினாலும், "அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் நஞ்சாகி விடு மல்லவா! வேறு வேறு சக்தி வாய்ந்த பாடகர்களை வரவழைத்துக் கேட்கிறோ மல்லவா! இது தவிர ஒவ்வொரு கூட்டத்தார்க்கும் வெவ்வேறுவிதமான இசையே இன்பத்தைத் தரும். சிலருக்குச் சினிமாப் பாடல்கள்தான் பிடிக்கும். சிலர் தியாகராஜக் கீர்த்தனங்களைக் கேட்க விரும்புவார்கள். இது இயற்கை. இதுபோலவே தான் எங்கும்.

பூக்கள் வண்டுகளின் ரீங்காரத்திலே தான் இன்பங் கண்டன. அச் சோலையிலுள்ள மரங்களுக்கும் அதுபோலவே இருக்கும் என்று சொல்லிவிட முடியாது. அவைகள் விரும்புவது வேறு பாடகர்களை. அவர்கள்தான் இனிய சொற்கிளியும், கம்பீரமான கீத மெழுப்பும் நாகணவாய் பறவையு மாகும். அங்கு சோலையிலே அவைகள் கீதங்களை எழுப்பிக் கொண்டிருக்கின்றன. மனத்தை உருக்கும் அவற்றின் இனிய பாடல்களைக் கேட்டு ஆனந்தத்திலே தலையசைத்து ஆமோதிப்பதுபோல மரங்களின் கிளைகளெல்லாம் காற்றிலே ஆடிக் கொண்டிருக்கின்றன. இவ்வளவு

ஆர்வத்துடன் பாடல் கேட்டு மகிழ்ந்த சோலை பாடகர்களாகிய கிளிக்கும் நாகணவாய் பறவைக்கும் ஏதாவது பரிசில் கொடுக்காமலா இருந்திருக்கும்? அவைகளும் மனமுவந்து தந்தன. எவற்றைத்தான் தந்திருக்கும்? பலவிதமான கனிந்த பழங்களை வெகுமதியாகக் கொடுத்தன. எவ்வளவு கொடைத்தன்மை? பாருங்கள்.

இவ்வளவையும் கண்டு களிக்கும் கற்பனைசக்தி வாய்ந்த கவிஞன் யார் தெரியுமா? 'அரிச்சந்திர புராணம்' பாடிய நல்லூர் வீர ஆசு கவிராயன். காசிமாநகரை அவன் வருணிக்கும்போது:—

"மாவெலாம் அரிகள் பாட
　　மகிழ்ந்துநல் வாச மன்றும்
பூவெலாம் செழுந்தேன் நல்கப்
　　பூவையுங் கிளியும் ஓதும்
பாவெலாம் உருகக் கேட்டுப்
　　பலகனிப் பரிசில் நல்கிக்
காவெலாம் தலையசைக்கும்
　　காசிநாட் டியல்பு சொல்வாம்."

என்று காசிநாட்டின் இயற்கை வளத்தை வர்ணனாவக் கொண்டு செல்லுகின்றான். கவிஞன் முன் எல்லாம் இனிதே என்பது இப்பொழுது தெரிகின்றதல்லவா? இன்றும் மணலை மாணிக்கக் கற்களாகவும். உதிர்ந்த சருகுகளை ஆத்மத்தியாகிகளாகவும் நம் முன் தோன்றச் செய்யக் கவிஞனால் முடியும் என்று இப்போதாவது ஒத்துக் கொள்ளுகின்றீர்களா? இல்லையாயின் இந்த மனித ஜன்மத்தையே வேறொரு பிரயோஜனமற்ற ஜன்மமாகப் படைத்து விடுவான், ஜாக்கிரதை! ஒவ்வொரு கவிஞனும் ஒவ்வொரு பிரமனல்லவா!

# 'காப்டன் பிளண்ட்'

(கார்த்திகேயன்)



பிளண்ட் ஒரு ராணுவ தளகர்த்தன். இரண்டு நீண்ட ஆண்டுகளாக அவன் யுத்தத்தில் உழன்ருன். மலையும்—மடுவும், சேறும்—சகதியும், நாடும்—காடும் அவனுக்கு யுத்த களங்களாக அமைந்தன. எத்தனையோ முறை பிணக்குவியல்மீது உதிர வெள்ளத்திலே நின்று அவன் போர் செய்துள்ளான்.

இந்தக் கோர யுத்த முழக்கம்—பேரிடி போன்ற பீரங்கி வெடியோசை. விர்ரென்ற குண்டுகளின் பாய்ச்சல், கிருகிரு வென்ற விமான ஊர்திகளின் ஒலி—இவற்றைத் தவிர வேறு எதுவும் இந்த இரண்டு வருஷகாலமாக அவன் செவிகளில் பட்டதில்லை. ஓய்வொழிவில்லா அலைச்சலும், பரபரப்பும், துடிதுடிப்பும் அவன் இளநெஞ்சத்தை வாட்டி சக்கையாகப் பிழிந்து விட்டன. யுத்த வாழ்க்கையின் ஆரம்பத்திலிருந்த ஆவேச வெறி—மோகம் எல்லாம் போய் அவன் அதை ஒரு நரக வாழ்வாகக் கருதலானன்.

அவனுக்கென்று ஒரு நாள் லீவுகூட என்னவோ கிடைக்கவில்லை. யுத்தப்போக்கின் கெடுபிடியோ அல்லது வேறெதுவோ அவனை அப்படி யுத்தரங்கத்தை விட்டு அசையாமற் செய்துவிட்டது.

வெட்டுப் பள்ளங்களினிடையே, புதர் மறைவுகளின் நடுவே, மலைக்குகைகளினூடே அவன் பதுங்கியிருந்த போதெல்லாம் அவன் நினைவு அந்த சுந்தரி ஜோன் பால் செல்லாமலில்லை. அவளது நீல விழிகளிலே சுடரும் இளமையும் ஆர்வமும் அவனால் மறக்கக் கூடியவைகளா? அப்போது அவன் மார்பையே பிளப்பதுபோல உள்ளத்தின் ஆழத்திலிருந்து ஒரு நீண்ட பெருமூச்சு எழும். அவனைப் போலத்தானே அவன் ஆருயிர்த்துணைவியும் தனியே தவிப்பாள்!—இதை நினைக்கும்போது அவன் விழிகளிலிருந்து கண்ணீர் பெருகும்.

ஒவ்வொரு நாளும் அவன் மனக்கவலை அதிகரித்து வந்தது. தனிமையின் ஏக்கம் அவனைப் பிடுங்கித் தின்றது. அந்த மலர்க்கரங்கள் எப்போது தன்னைக் கட்டித் தழுவும் என ஏங்கினன். தானும் தன் காதலியும் அந்தச் சில மாதங்கள் நடத்திய இன்ப வாழ்க்கையை நினைத்தான். அந்தச் சின்னவீடு, வீட்டைச் சுற்றிய பூஞ்சோலை, முன்புறத்திலிருந்த பூம்பந்தர் அனைத்தும் அவன் கண்முன் நின்றன. அந்த உல்லாச வாழ்க்கை போய் இப்போது அவன் ஆசை ஜோன் தன்னந்தனியே அயர்வும் அலுப்பும்

தோன்ற நடத்தும் வாழ்வு—தன் வரவுக்காக அவள் அல்லும் பகலும் கடவுளைத் துதித்துக் கண்ணீர் பெருக்குவது முதலான யாவும் சித்திரம்போல் அவன் மனத்திரையில் விரிந்தன.

இவ்வாறாக அவன் உள்ளத்தில் தன் வீட்டைப்பற்றிய நினைவுகளும், தன் மனையாட்டியைப் பற்றிய ஆசைக் கனவுகளும் கொந்தளிக்கலாயின.

ஒரு சமயம் அந்தச் சைன்யம் அங்கிருந்து வேறிடத்துக்கு மாற்றப்பட்டது. வழியில் ஒரு பெரிய ரயில்வே ஸ்டேஷன். அங்கிருந்து சுமார் 100 மைல் தூரத்தில் அவன் சொந்த ஊர் இருக்கிறது. அப்போது புறப்படத் தயாராக நிற்கும் மெயில் வண்டியில் ஏறினால் நள்ளிரவுக்குள் ஊர் போய் விடலாம். அங்கிருந்து மறுநாள் இரவு புறப்பட்டாலும் பொழுது விடிவதற்குள் தன் சேனையுடன் சேர்ந்து விடலாம்.

மெதுவாகத் தன் படைகளிலிருந்து நழுவினன். நெஞ்சம் படபடக்க தன்னூர் நோக்கிச் செல்லும் ரயில் வண்டியில் ஏறி விட்டான். வண்டி புறப்பட்டது. ஆசை மிகுதியில் அவன் உள்ளம் துள்ளிக் குதித்தது. "ஆ! என்ன முட்டாள்தனம் செய்து விட்டேன்! முன்னதாக அவளுக்கு என் வருகையைத் தந்திமூலம் தெரிவித்திருந்தால் அவள் எவ்வளவு குதூகலமாக என்னை வரவேற்பாள்?" என்று தனக்குள் சொல்லிக் கொண்டான்.

"நான் வீட்டை யடையும்போது நடுச்சாமமாகி விடும். ஆனாலும் என்ன? அவள் என் குரலைக் கேட்டதே ஓடிவந்து என்னைத் தன் மிருதுவான கரங்களால் வரவேற்க மாட்டாளா? அவளது இளம் விழிகளிலே ஜொலிக்கும ஆசையும், கொஞ்சலும் போய் விடுமா? என்னைக் கண்டதே எத்தனை ஆருமையோடு அவள் நெஞ்சம் துடிக்கும், தெரியுமா?" இவ்வாறு எண்ணிக் குதூகலித்தான்.

குறித்த ஸ்டேஷன் வந்திறங்கியதும் 5 மைல் தூரம் ஒரு டாக்ஸியில் செல்ல வேண்டும். அப்புறம் அவன் வீடு—அந்த மனோகர மாளிகைதான்!

ஒரு டாக்ஸி அமர்த்திக் கொண்டான். அதுவும் காற்றாய்ப் பறந்தது. அதோ! அந்த உல்லாசக் கிருகம்! டாக்ஸி நின்றது. ஆசை பிறிட்டெழும் உள்ளத்தோடு கீழே குதித்தான். அங்கே யாரும் இல்லை.

வெளி கேட்டைக் கடந்து உள்ளே நடந்தான்—இல்லை; ஓடினன்; ஆசையின் உத்வேகம் அவனைத் தள்ளிக்கொண்டு போயிற்று.

வீட்டு முன் வாயில். கதவு தாளிட்டப்பட்டிருந்தது. ஜோன் இந்த அகால இரவில் உறங்காது என்ன செய்வாள்? அவன் எப்படி உள்ளே செல்லுவது? வெளியிலுள்ள மணியை அசைத்

தால் அவள் ஏதோ ஆபத்தான தங்கி வந்ததாக்கும் என்று அலறி யடித்துக் கொண்டு ஓடி வருவாளே, ஆதலால் அது சரியல்ல.

முடிவில் ஒரு யுக்தி செய்தான். வீட்டின் பின்புறத்தே ஒரு நீர்க்குழாய் உண்டு. அது உயரச் சென்று மனைவியின் அறையினுள் நுழைகிறது என்பதை அவன் முன்னமே அறிவான். அதைப்பற்றிக் கொண்டு ஏறினால் அவள் அறையினுள் சுலபமாகக் குதித்து விடலாம். திடீரென அவள் முன்தோன்றி அவளைத் திகைக்கும்படி செய்ய வேண்டும்.

இரண்டொரு நிமிஷங்களில் அறையினுட் பிரவேசித்தான். ஒரே இருள். சாளரத்தின் வழியாக சிலுசிலு வென்று காற்று வீசிக்கொண் டிருந்தது. அந்தப் பெரிய அறையில் அவள் படுத்திருக்கும் இடம் எது? அதைக் கண்டு கொண்டால் அவளது மெல்லிய அதரங்களிலே தன் ஆசை யெல்லாம் தீர ஒரு முத்தம் கொடுக்கலாம்! அப்போது அவள் என்ன செய்கிறாள் என்று பார்க்க வேண்டும்?

இப்படி எண்ணியவாறே அவள் படுக்கையைத் தேடிய வண்ணம் நடந்தான்.

"ஆ! அதென்ன ஓசை!" என்று சற்று தயங்கி நின்று நிதானித்தான். பின் "ஆம். சந்தேகமில்லை. இருவர் மூச்சுவிடும் ஓசை கேட்கிறது. ஆமாம்; ஒரே படுக்கையி லிருந்துதான் வருகிறது! ஒன்று அமரிக்கையான ஸ்திரீயின் மூச்சு! மற்றது ஒரு ஆடவனுடைய 'கொர்' என்ற ஓசையோடு எழும் கனத்த சுவாசம்!"

இப்படி அவன் எண்ணியபோது அறையின் ஒரு மூலையிலிருந்த கணப்புச் சட்டியிலிருந்து தீ ஜ்வாலை விட்டு எரிந்தது. அந்த வெளிச்சத்தில் படுக்கையைக் கண்டு கொண்டான். அதில் ஒரு யுவதியும் அவள் பக்கத்தே ஒரு யுவனும் சயனித்திருப்பதையும் பார்த்து விட்டான். அவன் தலை சுழன்றது.

"ஆ! மோசக்காரீ! சண்டாளீ! மானங் கெட்டவளே! என் தலையில் கல்லைப் போட்வா காத்திருந்தாய்?" என்று அவன் பதறினான். அவன் அறிவு குழம்பியது. அவன் ஆசை மனக்கோட்டை யெல்லாம் இடிந்து தவிடுபொடியாய் விட்டது. அப்படியே தலைமீது கையை வைத்துக் கொண்டு சோர்ந் துட்கார்ந்தான்.

பின்னர் திடீரென்று வெறி பிடித்தவன் போல் எழுந்தான். இடைப்பையிலே யிருந்த கத்தியை எடுத்து விரித்தான். அது பளபள வென்று மின்னியது. படுக்கையண்டை ஓடினான். அதே சமயத்தில் அந்த தீ ஜ்வாலையும் மறைந்தது. மீண்டும் ஒரே இருள் கவிந்தது.

ஓசை படாமல் காரியம் முடிந்து போயிற்று. இரு உயிர்களும் இந்த உலக பாசத்தினின்றும் விடுதலை யடைந்தன. நல்ல காலமாக அங்கு யாரும் இல்லை. அவன் வந்ததுகூட யாருக்கும் தெரியப் போவதில்லை.

உடனே அதே நீர்க்குழாய் வழியாக வெளியேறினான். பொழுது புலரும் வரை நடந்தே சென்றான். வழியிலிருந்த ஏதோ ஒரு சிறு ஸ்டேஷனில் ரயிலேறி மீண்டும் தன் சைன்யத்துடன் கலந்து கொண்டான்.

ஒரு வாரம் சென்றது. அவனுக்கு ஒரு தபால் வந்தது. அதைக் கண்டதே அவனால் நம்பமுடியவில்லை. அது அவனது மனைவியிடமிருந்து வந்தது.

"என் ஆருயிரே! தங்கள் தயவாலும், கடவுள் கிருபையாலும் நான் சுகமே! தங்கள் வரவைத் தினமும் ஆவலுடன் எதிர்பார்க்கிறேன்......சென்ற திங்களன்று இரவு பக்கத்து வீட்டில் ஒரு கோரக்கொலை. கணவன் மனைவி இருவரையும் யாரோ குத்திப் போட்டுவிட்டு ஓடி விட்டான். ஆதலால் எனக்குத் தனியே இருக்க அச்சமா யிருக்கிறது. எப்படியாவது உடனே லீவு வாங்கிக் கொண்டு வந்து விடுங்கள். என்னால் இனி ஒரு க்ஷணமும் தனியே யிருக்க முடியாது........."

அவன் உடம்பு முழுதும் நடுக்க முற்றது. 'ஐயோ! என்ன பாதகம் செய்தேன்!' என்று அலறினான். 'கடவுளே! இந்த பாவத்திற்கு என்ன தண்டனை கொடுப்பாயோ!' என்று அவன் கதறியபோது வானவீதியில் விர்ரென்று பாய்ந்த குண்டொன்று அவன் தலையைச் சுக்கு நூறாக்கி விட்டுச் சென்றது.



விஞ்ஞானம்

# புதுக்கற்காலத்தில் பொலிதல்

(டி. பி. நவநீத கிருஷ்ணன், M. A.)

பழங் கற்காலத்தின் இறுதிப் பகுதியில் வாழ்ந்த மக்கள், வேட்டையிலும் உணவுப் பொருள்களைச் சேகரிப்பதிலும் மிகவும் வல்லுனராயினர். அவர், அக்காலத்தே, தாம் அதன் முன்னே கண்டிருந்த விளைவொன்றை நன்கு கவனிக்கலாயினர். அவ்விளைவைப் பற்றி மேலும் ஆழ்ந்து கவனஞ் செலுத்தியதால், மக்கள் வாழ்க்கை முறையிலேயே பெரும் மாறுதல்களுக்குக் காரணமான முக்கிய விஷயங்களை அறிய நேர்ந்தது. அவ்வாறு, மக்கள் வாழ்க்கையில் நேர்ந்த பெரும் மாறுதல்களை யொட்டியே, அம் மாறுதல்களினின்று தொடர்ந்த காலமானது, மக்கள் சரித்திரத்தில் வேறோர் 'காலப் பகுதியாய் கொள்ளப்பட்டுள்ளது. முக்கியமான அவ்விளைவுகளைப் பற்றி இனி விவரிக்கலாம். அநேக நூறாயிர மாண்டுகளாய், மக்கள், புசித்து வந்த உணவு வகையில் கனிகளும் விதைகளும் அடங்கி யிருந்தன. அவ்விதைகளில் சில ஓரோரமயம், அருந்தப் படாது, மக்கள் வசித்து வந்த குகைகளைச் சுற்றியிருந்த இடங்களில் விழுந்தன. தெளிக்கப்பட்ட விதைகள் தளிர்த்துப் பயிராகி, மேலும் விதைகளை விளைவித்தன. இவ்விளைவே, நாம் முக்கியமான தொன்றென, மேலே குறிப்பிட்டது. எவ்வாறோ சிதறுண்டு விழுந்த விதைகள் பயிராய் முளைத்து, மேலும் விதைகளைத் தந்ததைப் பற்றி, மக்கள், முதலில் கவனஞ் செலுத்தவில்லை. அவ்வாறு கிடைக்கப்பட்ட விதைகளை உண்பதுடன் நின்றனர். ஆனால், பின்னர், விதை விதைத்துப் பயிரிடும் வேலையை முறையே செய்யத் தொடங்கினர். ஆனால், இம்முறையால் கிடைத்த உணவுப் பொருள்களை, அவர்கள், ஒரு பொருட்டாய் எண்ண வில்லை. வேட்டையாலும், சேகரிப்பதாலும், பெற்ற ஆகாராதிகளையே அவர்கள் பெரும்பாலும் நம்பி வந்தனர். பயிரிடுவதால் கிடைத்தவற்றை, உபரியுணவெனவே கருதி வந்தனர். ஆனால் பயிரிடுமுறை விருத்தியாய்க் கொண்டே வந்து, காலாந்திரத்தில், விதைகளே முக்கியமான உணவாகி, பயிர்த் தொழிலே பிரதானமான உணவு பெறும் வழியாயிற்று. இந்நிலைமை, சுமார் கி. மு. இருபத்தைந்தாயிரமாவது ஆண்டில் ஏற்பட்டது.

உலகின் சீதோஷ்ண நிலைமை மேலும் மேலும் சீர்பட்டு வந்தது. ஈரவியல் குறைந்து, மிதமான நிலைமை யேற்பட்டது. இந்நிலைமை பலவிதமான புற்கள் தழைத்தற்கு அனுகூலமாயமைந்தது. அங்ஙனம், தற்செயலாய் மண்டி வளர்ந்த புற்களினின்று விளைந்த விதைகளை, மக்கள், மேலும் மேலும் தம் உணவில் சேர்த்துக் கொள்ளலாயினர். அவ்விதைகளே, நாம் தற்காலத்தில் பயனுக்கிக் கொள்ளும் கோதுமை, நெல், தினை, இன்

ஞோரன்ன தானியங்களாய்ப் பரிணமித்துள்ளன. தானியங்களை அதிகமாய்த் தம் உணவில் சேர்க்க ஆரம்பித்தபின், மக்கள், அவற்றைத் தாமே முறையாய்ப் பயிரிட்டுப் பெற முற்பட்டனர். சிறிது காலத்திற்குப்பின், சில சமுதாயங்களில், வேளாண்மையே வேட்டையைவிட முக்கியமான வேலையாய்க் கருதப்படலாயிற்று. அச் சமுதாயங்களின் கட்டுப்பாடு ஒழுங்கு முறைகளும் வேட்டையைப்பற்றி நில்லாது, வேளாண்மைக் கேற்றவாறு திருத்தப் பட்டன. சிறிது சிறிதாய், மேலும் பல சமுதாயங்களும், வேட்டையாடுவதை விட்டு விட்டு, வேளாண்மையையே பின்பற்ற லாயினர். இவ்வகையான தொழில் மாற்றம் உலகில் தொடங்கிய தினின்று, ஒருவாறு முற்றுப் பெறுதற்கு, பல்லாயிர மாண்டுகளாயின. முதன் முதலாய்ப் பயிரிட்டவர், ஆண்டாண்டு தோறும் ஒரே இடத்தில் விதை விதைத்ததால், நிலத்தின் வளம் குன்றி வருதலைக் கண்டிருக்க வேண்டும். ஆனால், அக்காலத்தில் விவசாயம் செய்யப்படாத நிலம் மிகுந்திருந்ததால், உரமிழந்த நிலத்தை விட்டு, வளமான புதுப்புலங்களில் சாகுபடி செய்தல் எளிதா யிருந்தது.

விவசாயத்தின் விருத்தியால் தோன்றிய சமூகவியலான விளைவுகள் அநேகமும் அதிகமும் ஆனவை. கற்கருவிகள் செய்ய இயன்ற போதும், தீ மீது ஆட்சி பெற்ற காலையும், உற்பவித்த அளவு கடந்த விளைவுகளுடனேயே, வேளாண்மை விளைவித்த விடயங்களை ஒப்பிடலாம். கோதுமை, வாற்கோதுமை இன்னோ ரன்ன தானியங்கள் ஊட்டவியல் மிக்க உணவுப் பொருள்க ளாகும். அவற்றை அடர்த்தியாய்க் குவித்து சேமித்து வைத்துக் கொள்ளலாம். அவை நீண்ட காலத்திலும் அழுகிக் கெடாம லிருப்பவை. பல வகையினவையான உணவுப் பொருள்களைப் பெறுதற்கான உழைப்பின் அளவுக்கும், அவை பெறப்படும் அளவுக்கும், இடையுள்ள வீதங்களைக் கணக்கிட்டுப் பார்த்தால், தானியங்கள் பாற்பட்ட வீதங்களே அதிகமாயுள்ளன. தானியங் களைப் பெறுதற்கு, நடுதல் ஆனபின், பயிர்கள் வளருங்காலத்து, அவற்றைக் கவனிக்க வேண்டியதற்கான உழைப்பும் சொற்பமே. ஆதலின், விவசாயிகள், அவர்களது முன்னோர்களான வேடர் களைவிட, அதிகமான ஒழிவு காலத்தைப் பெற்றனர். மாரிகாலத் திற்கான வேண்டப்பட்டனவான உணவுப் பொருள்களைச் சேமித்து வைப்பதும், அவர்களுக்கு எளிதாயிற்று. இவ்வாறு ஏற்பட்ட வேளாண்மை யெனும் புதிதான செய்வினைத் தொழில், மக்கள் தொகை பெருகுதற்கு அனுகூல மளித்தது. வேட்டுவ காலத்தில், கிடைக்கக்கூடிய உணவுப் பொருள்கள் கனிகள் முதலானவையும், இறைச்சியுமேயாம். சேகரிக்க முடிந்த கனிகள் முதலானவையின் தொகை ஓரளவுக் குட்பட்டவாறே யிருந்தன. வேட்டையாடிக் கொல்ல இயன்ற விலங்குகளின் எண்ணிக்கையும் ஓரளவுக் குட்பட்ட தானதே. எனவே, கனிகள் முதலானவற்றை யும், விலங்குகளின் இறைச்சியையும் புசித்து உயிர் வாழும் மக்க ளின் தொகையும், அவ்விலங்குகள்—கனிகள் இன்னோரன்னவற்

றின் தொகையைப் பொருத்த வாறே யிருந்திருக்க வேண்டும். ஆதலின், அவர்களுக்குப் பிற்காலத்திருந்த மக்கள் தொகையுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, வேட்டுவ நிலைமையிலிருந்த மக்கள் தொகை குறைவாகவே யிருந்தது. மேலும் மேலும் புதுப் புதுப் புலங்கள் கிட்டும் வரை, வேளாண்மையால் வாழும் மக்களின் தொகை அதிகரிக்க இடமுண்டு. ஏனெனில், மக்கள் தொகை பெருகிய நிமித்தம், மிகுதிப் பட்டவரான ஒவ்வொருவரும், புதுப் புது நிலப்பகுதிகளைச் சாகுபடி செய்து வாழ இயலும். விவசாயம், பெண்டிரும் பிள்ளைகளும் வேலை செய்ய இடந்தருகின்றது. வெகு தூரம் விலங்குகளைப் பின் தொடர்ந்து வேட்டை யாடுதல்,—கரடு முரடான பாதைகளில் திரிந்து கிழங்குகளைத் தோண்டி யெடுத்துச் சேகரித்தல்,—மரங்களிலேறி கனிகளைப் பறித்தல் இன்னோரன்னவற்றிற்கான கடும் உழைப்பு, பயிரிடும் தொழிலி லீடுபடுதற்கு இன்றியமையாததான தன்று. களை பிடுங்குதல், நாற்று நடல் என்பவை போன்ற எளிதான பணிகள், பெண்டிரும் பிள்ளைகளும் செய்ய ஏற்றமை.

வேளாண்மையால், மற்றோர் வகையிலும், முக்கியமான விளைவுகள் ஏற்பட்டன. வேட்டுவ காலத்தில், உணவுப் பொருள்களை ஒழுங்காகவும், செவ்வனேயும் சேமித்து வைத்திருக்க இயலாதிருந்தது. சேமித்து வைக்கப் பட்டவையும் பெரும்பாலும் இறைச்சி யியலானவை. அப் புலாலுணவை மோப்பம் பிடித்து, அவற்றைக் கவர்ந்து செல்லவந்த கொடும் காட்டு மிருகங்களாலான ஆபத்துக்கு, அம்மக்கள் உட்பட வேண்டிய தாயிற்று. இங்ஙனம், அவர்கள் பலவிதமான இன்னல்களுக் காளாயினர். பயிர்பாற்பட்ட உணவைத் தேடியும் விலங்குகள் வந்தன. ஆனால், அவை குரூரமான மிருகங்களன்று. அவற்றினால் அபாயமில்லை. சாதுவான, அப் பிராணிகளை, மக்கள் பிடித்து, வயப்படுத்தி வளர்க்க லாயினர். சில வகையானவற்றினின்று பாலைக் கரந்து, அருந்தலாயினர். சில வகையானவற்றின் உரோமத்தினின்று, கம்பளிநூல் பெற்று, அவற்றால் ஆடைகளைச் செய்து போர்த்துக்கொள்ள லாயினர். அப் பிராணிகள், தேவையான போது உணவுப் பொருள்களாயு மாயின. இவ்வகையில், தம் நாற்றம் கொடும் விலங்குகளின் மோப்பத்திற் கெட்டுமாறு இல்லாததான இறைச்சியியலான உணவை, வேண்டும் போதெல்லாம் புத்துணவாயு மிருக்கும் விதமாய், சேமித்து வைக்கும் வழியேற்பட்டது.

இங்ஙனம், மக்கள் வேளாண்மையின் பாற்பட்ட வினைவகைகளில் தேர்ச்சி யுற்றனர். அதன் பின், பயிர்களைச் சிறக்கச் செய்யும் வழிகளைக் கற்கலாயினர். தாம் சாகுபடி செய்து பெற்ற தானியங்களில், பெரிதும் சிறப்பும் ஆன மணிகளைப் பொறுக்கி யெடுத்தனர். அவற்றை அடுத்த சாகுபடிக்கான் விதைகளாய் உபயோகித்தனர். இவ்வாறு, பன்முறை செய்ததினின்று காலப்போக்கில் மேலும் மேலும் செழிப்பான பயிர்கள் விளைந்தன. மேற் கூறிய முறையைத் தாம் வளர்த்து வந்த பிராணிகளிடையும்

அனுசரிக்கலாயினர். அதாவது, அப் பிராணிகள் ஈன்றபேர்து பெறப்பட்ட குட்டிகளில் சிறந்தவற்றைத் தேர்ந்தெடுத்து தனிப் படுத்தினர். அவற்றைச் சிறப்பாய் வளர்த்தனர். அவற்றின் வழியே தோன்றிய குட்டிகளைக் கொண்டு மேலும் இனப்பெருக்கம் பெற்றனர். இவ்வகையில் மேலும் மேலும் சிறந்தவை கிடைத் தன. இவ்வாறு, ஒரு பயிர் அல்லது விலங்கினத்தில் சிறந்த வற்றைப் பொறுக்கியெடுத்து இனப் பெருக்கம் பெற்று, அவ் வினத்தைச் சிறக்க வைக்கும் முறைக்கு, 'தேர்தலியலான வள முறு ஈன்றல் முறை' (ஸெலெக்டிவ் ப்ரீடிங்கு) என்று பெயர். இம்முறையை யொட்டிய அறிவை, அம்மக்கள் பெற்றனர். இம் முறையை வினைசெய் வகையில் பின்பற்றி செழிப்பான பயிர்களை யும், பால் சுரக்கும் இனங்களையும், கொழுத்த பிராணிகளையும், கம்பளிக்கான உரோமம் தரும் மறிகளையும், அம் மக்கள் சிறப் புறப் பெற வாய்த்தது. இங்ஙனம், உயர் ரகமான கால் நடைப் பிராணிகளும், நற்பயிரும், தேர்தல் முறையறிவும் விளைந்தன.

உலகின் பல பாகங்களை மூடியிருந்த உறைபனிப் போர்வை யும், பனியுருகி, விலகிற்று. உருகிய பனி நீராய் ஓடிற்று. ஆத லின் அவ்விடங்கள் சதுப்பு நிலங்களாயின. சீதோஷ்ண நிலைமை மிதப்பட்டபோது, அப் பிரதேசங்கள் சிறிது உலர்ந்தன. அவ் விடங்கள் பச்சைப் போர்வையால் மூடப்பட்ட, பசும்புல் படர்ந்த பரப்புகளாயின. ஆனால், அவை நீண்டகாலம் அவ்வாறேயில்லை. நெடுங்காலம் நீரில் தோய்ந்து கிடந்த நிலமானமையின் அவை, புது வளத்துடன் இருந்தன. ஆதலால், ஆங்கு வெகு விரை வாய் மரங்கள் தோன்றி, வளர்ந்து, தழைத்தோங்கின. அவை யெல்லாம் சேர்ந்ததால், அவ்விடங்கள், வானளாவிப் பரந்த மரங்கள் செறிந்த, அடர்ந்த வனங்களாய் சீக்கிரத்தில் மாறின. இங்ஙனம், உலகின் பல பாகங்களில் பெருங் காடுகள் மிகுந்தன. அக்காடுகளில் வேட்டைமேல் செல்லுதல், கடினமாயிற்று. அக் காலத்திலேயே வேளாண்மைப் பெருக்கமும் ஏற்பட்டது. இவ் விரு காரணங்களை முன்னிட்டு வேட்டுவத் தொழிலின் முக்கியத்து வம் குன்றியது. காடுகளிலுள்ள மரங்களை வெட்டிப் பயன் படுத்த வும், அவையிருந்த இடங்களை வேளாண்மைக்கேற்ற நிலங்களாக்க வும் ஆனதற்கான வழிகளில் மக்கள் முனைந்தனர். பழங்கற் காலத்துக் கருவிகள், மேற்கூறப்பட்ட நோக்கங்களை நிறைவேற்று தற்கேற்ற வகையானவையன்று. ஆதலின், அக் கருவிகளைவிடச் சிறந்த ஆயுதங்களின் துணையை நாடவேண்டியதாயிற்று. 'தேவை யென்பதே புதிது கண்டுபிடித்தல் என்பதின் அன்னை' யென்ற ஆங்கிலப் பழமொழி யுண்டு. அதற்கேற்ப தேவையால் தூண் டப்பட்ட மக்கள், திருந்திய வகையான கருவிகளை ஆக்கக் கற்ற னர்; செம்மையான புதுவகைக் கல்லாயுதங்கள் செய்யப்பட்டன.

புதுக் கற்காலம் பிறந்தது. வேளாண்மை அதனுடன் தொடக்கமாயிற்று எனலாம். அக்காலம் இற்றைக்குச் சுமார் முப்பதினாயிரம் ஆண்டுகளுக்கு முன் தொடங்கிற்று. அக்காலம், பழங்கற்காலம் போன்று, பல் நூறாயிரம் ஆண்டுகள் நீடித்திருக்க

வில்லே. சிலவர்யிரம் ஆண்டுகளே, புதுக் கற்காலப் பகுதியில் அடங்கியவை. பழங் கற்காலத்துக் கருவிகள் மழுங்கியவை; கரடு முரடானவை. புதுக்கற்காலத்துக் கருவிகள் கருக்கானவை; கூர்மையானதும், நேரானதுமான ஓரங்களுடனுள்ளவை; சமமாய் இழைக்கப்பட்ட பரப்புள்ளவை. இத்தன்மையான ஆயுதங்கள், மரங்களை வெட்டவும், பிளக்கவும், அறுக்கவும் ஏற்றவை. அவை, சாணைக்கல்லில் தீட்டப்பட்டவை. சாணை பிடித்து தீட்டலாம் என்றதான எண்ணம் தானியங்களை அரைக்கும்போது கற்களும் தேய்ந்து சமப்படுவதைக் கண்டதினின்று, தோன்றியிருக்கலாம். ஆயுதங்களைச் சாணை பிடிக்கும்போது, தீப்பொறிகள் பறந்திருக்கலாம்; அத் தற்செயலான நிகழ்ச்சியைக் கவனித்ததால், கடினமான பொருள்களை உராய்ந்து, தீயைச் செயற்கை முறையில் பெறும் வழி கண்டு பிடிக்கப்பட்டிருக்கலாம். செம்மையான ஆயுதங்கள் பெறப்பட்ட காலமும், ஏராளமான மரக்கட்டைகள் கிடைத்த காலமும் ஒன்ரு யிருந்தமையின் தச்சுவேலே ஆரம்பமாயிற்று. தச்சுவேலே மும்மரப்பட்டதால், வீடுகள் கட்டுவதில் மரக்கட்டைகளும் பலகைகளும் பயன் படலாயின. அதனுல் கட்டிட வேலேயிலும் அபிவிருத்தி யேற்பட்டது. வீட்டில் வழங்கப்படும் தட்டு முட்டுச் சாமான்கள், பலவிதமான மணைகள், குறிச்சிகள், கட்டில்கள் இன்னேரன்னவையும் செய்யப்படலாயின.

புது சகாப்தத்தில் கண்டு பிடிக்கப்பட்ட மற்ருேர் முக்கியமான தொழின்முறை, குயத் தொழிலாம். பழங்கற்காலத்து மக்களின் உணவில் சமைக்கப்பட வேண்டிய பகுதி, இறைச்சி மட்டுமே. அதைக் குச்சியில் கோத்து, வாட்டவும், வறுக்கவும் முடியும். அதைச் சமைக்கப் பாண்டங்கள் வேண்டாம். ஆனுல், புதுக் கற்காலத்து மக்களின் ஆகாரத்தில் பெரும் பகுதி, தானியங்களைச் சமைத்துண்ணும் வண்ணமானது. முதலில் அவர்கள் தானியங்களை இடித்து மாவாக்கிப் பிசைந்து, ரொட்டியாய்த் தட்டிச் சுட்டுண்டு வந்தனர் எனலாம். அப்படி ரொட்டியைச் சுடுவதற்கு எவ்வாருே எரியும் தீ ஏற்றதன்று. நிதானமாய் நின்றெரியும் நெருப்பு வேண்டும். அதைப் பெறும் வகையில், அம் மக்கள் அடுப்பு கட்டி யிருக்கவேண்டும். அடுப்பு கட்டும்போது கற்களிடை யேற்பட்ட இடுக்குகளை மூட, அவர்கள் களிமண் பூசியிருக்கலாம். அப்படி அமுக்கி வைக்கப்பட்ட களிமண் மீது சூடுபட்டபோது, அது கெட்டியானதையும், அதன் முன், களிமண் பகுதி கொண்டிருந்த உருமாரு திருந்ததையும், அவர்கள் கவனித்திருக்கவேண்டும். இதைப்பற்றி மேலும் ஊன்றிக் கவனஞ் செலுத்தியதால், பாண்டங்கள் செய்யும் வகையான குயத்தொழில் எழுந்தது.

மட்கலங்கள் செய்தல், இயைபியலான (கெமிகல்) மாற்றத்தினுல் ஏற்பட்ட ஆக்க வியலான வினேவின், முதன் முதலான எடுத்துக் காட்டு எனலாம். அதில், பலவாருன வினே செய்வகைகள் (டெக்னிக்) பலவுள்ளன. முதலில், தக்க சீரான முறையில் கலவாத களிமண்ணைப் பிசைந்து உருவாக்க இயலாது. ஈரம்

அதிகமானுல், களிமண் குழைந்து சேருய் விடும்; ஈரம் குறைந் தால் காய்ந்து உதிர்ந்து விடும். அதில் நொய்யான மணலில்லா விடின், பிசைந்து உருவாக்கும்போது கையில் ஒட்டிக்கொள்ளும். மணல் நொய்யாக இல்லாது பெரும்மணிகளா யிருந்தால், களி மண் சரியாய் இறுகி கெட்டிப்படாது. இவ்வளவு வகைப்பட்ட செயல் முறையான அறிவு, களிமண்ணை யுருட்டத் தேவையா யுள்ளது. களிமண்ணுல் உரு வாக்கப்பட்டதை உடனே சுட்டால், அதில் பிளவுகள் எற்படும். ஆதலின் செய்யப்பட்ட உருவைக் காய வைத்து உலர்த்தவேண்டும். அதன் பின்னே, 600°cக்கு அதிகமான வெப்ப நிலைக் குட்படாதவாறு, சிராய்ச் சுடவேண் டும். அப்படிச் சூடேறும்போது. அவ்வுரு கெட்டிப்படுகின் றது. களிமண் உரு கெட்டிப்படுதற்குக் காரணம் கூறலாம். களிமண்ணின் பெரும்பாலான பகுதி, அல்யூமினியம் ஸிலிகேட் என்பதனுலானது. குறைந்த வெப்ப நிலையில் (அதாவது சூடுபடும் முன்), அதனுடன் தண்ணீரும் இயைபாய்ச் சேர்ந்துள்ளது. சூடு பட்டபோது, அந்நீர் ஆவியாகி வெளிப்பட்டு விடுகின்றது. அத ஞல் களிமண்ணுரு கெட்டிப்படுகின்றது. சுடப் படும்போது, உரு வாக்கப்பட்ட பாண்டத்தின் நிறம் மாறுகின்றது. முடிவில் அது பெறும் நிறம், களிமண்ணின் இயைபுப் பகுதிகளைப் பொருத்துள்ளது. களிமண்ணில் இரும்பு ஆக்ஸைட் எனும் பொருள் சிறிது இருந்து, வெளியிலுள்ள காற்றுப் படுமாறு திறந்த முறையில் பாண்டம் சுடப்படுமாயின், இரும்பு ஆக்ஸைட், காற்றிலுள்ள ஆக்ஸிஜன் எனும் வாயுவுடன் இயைபாய்ச் சேர் ந்து, மற்ருேர் வகையான இரும்பு ஆக்ஸைட் ஆகின்றது. அவ் வகையான இரும்பு ஆக்ஸைட் செந்நிறமானது. ஆதலின் சுடப் பட்ட பாண்டம் சற்றே சிவப்பான நிறத்தைப் பெறுகின்றது. களிமண் பாண்டம், காற்றுப் படாதவாறு, தணலிடை வைக்கப் பட்டு சுடப்படின், களிமண்ணிலுள்ள இரும்பு ஆக்ஸைடினின்று, ஆக்ஸிஜன் வாயு வெளிப்படுகின்றது. ஆக்ஸிஜன் குறைந்த தால், மற்றுமோர் வகையான இரும்பு ஆக்ஸைட் ஏற்படுகின்றது. இவ்வகையானது, கருநிறமானது. ஆதலின் மட்பாண்டம் கறுமை படர்ந்த சாம்பல் நிறத்தைப் பெறுகின்றது. புதுக்கற் காலத்துக் குசவனே, குசத்தியோ, மேற்கூறப்பட்ட அறிவின் பாற்பட்ட வினைசெய் வகைகளில் தேர்ச்சியடைந் திருந்தனர். பல்வேறு நிறங்களாலான பானைகளைச் செய்யவும் அக்காலத்து வினைஞர் அறிந்திருந்தனர். இவற்றிற்கான இயைபியலான அறிவு, பல வகையினவற்றைக் கொண்டுள்ளது. ஆயினும், அதன் பாற்பட்ட செய்வினை வகைகளை, அக்காலத்து மக்கள் நன்கு அறிந்தே யிருக்கவேண்டும் என்பதற்கு, அவர்களால் செய் யப்பட்ட பல வர்ண பாண்டங்கள் இன்று நமக்குக் கிடைப்பதே, தக்க சான்ரும். மேற் கூறப்பட்ட பலவினவான செய்வினை வகை களை, ஆசியா கண்டத்து மக்கள் அறிந்ததின்பின், நீண்டகாலம் சென்றது. அதன் பிறகே, ஐரோப்பாக் கண்டத்து மக்கள் அவ்வினை வகைகளை அறியலாயினர்.

(தொடரும்.)

# வஸந்த ஒய்யாரி

("ரகுநாதன்")

"மலரினில், நீல வானில்
மாதரார் முகத்தில் எல்லாம்
இலகிய அழகை ஈசன்
இயற்றினன்."

என்று உளங் களித்துப் பாடுகிறுன் கவிஞர் கோமான் பாரதி.

கணத்துக்குக் கணம் புது சௌந்தர்ய ரூபம் பெறும் இயற்கைத்தேவியின் நடனக்கால்களின் சுழற்சியில் அழகு மிகுதியாக இயங்கத்தான் செய்கிறது. தாரகை மல்லிகைகளும், பூர்ணிமைப் பங்கஜமும் பூக்கின்ற நீலவானக்கட்லில் அழகியல் சொக்குகிறது. மேகங்களின் அமிருத தாரையை விரும்பி ஏங்கி நிற்கும் அழகும் கண்ணிற்கு குளுமையானது. காதல் சிருஷ்டியான தாஜ்மஹாலும், குற்ருலத்து அருவியின் வெள்ளித்தாரையும், சொக்குப்பச்சை விரித்த ஹிமாலயக் காடுகளும் அழகுடையவை தான். ஆயினும், ஒரு அழகிய பெண்ணின் முக அழகுக்கு இதெல்லாம் ஈடாகாது. "காதல் புரியும் இளங் கன்னியரின்" வனப்பும், முக விலாஸமும் ஈசனையுங் கூட, நிலைதடுமாறச் செய்யும். தென்திசை இலங்கை வேந்தனுகிய ராவணன் மயங்கியது, சீதையின் வனப்பால். பாரத யுத்தத்துக்குக் காரணம் பாஞ்சாலியின் முத்துப்பற்கள் உதிர்த்த முல்லைச்சிரிப்பு. ஹோமரின் காவியம் புகழுகின்ற டிரோஜன் யுத்தம் ஹெலனின் சௌந்தர்யக் கவர்ச்சியாலே ஏற்பட்டது தானே! எகிப்து ராணியான கிளியோபாட்ராவினுல் ஏற்பட்ட புயல்களும் கொஞ்ச நஞ்சமா? இதற்கெல்லாம் காரணம்? மாதரார் முகத்தில் இலங்கும் அழகுதானே!

அழகைப் படம் பிடித்து, கற்பனைக் கோலால் நகாசு வேலை செய்யும் தொழில் சாதாரணமான மனிதனுல் முடியாது. அதற்கென்று பிறந்தவன் கவி. அப்படிப்பட்ட ஒரு கவி பிடித்த அழகுச் சித்திரத்தைப் பார்ப்போம்:

குற்ருலக் குறவஞ்சியைப் படித்தவர்களுக்கெல்லாம் வஸந்த ஒய்யாரி நன்கு பரிச்சயமாகியிருப்பாள். அவளது அழகை, கவி திரிகூட ராஜப்பர் தீட்டுகின்ற விதமே அலாதியானது. அவள் நடந்து செல்லும்போது புலம்புகின்ற கால் சிலம்புகளின் ஓசை கூட, பாட்டில் கேட்கும்படி செய்து விடுவார், அவர்.

மேகங்கள் கன்னங் கருத்து உலாவுகின்றன. காற்றின் அசைவாலும் உற்சாகக் களிப்பாலும், அவை சுருண்டு புரண்டு செல்கின்றன. அந்த மேகங்களைப்போல. சுருண்டிருந்த வஸந்தவல்லியின் அளக பாரம், அவளது வேல்விழிக் கோணத்தில் ஏற்படும் அலைகள் நமது மனத்தையே சூறையாடி விடும்.

"இருண்டமேகம் சுற்றிச் சுருண்டு சுழி எறியும்
கொண்டையாள்—குழை
ஏறி ஆடி நெஞ்சைச் சூறையாடும் விழிக்
கெண்டையாள்.

குழலும், கெண்டை விழியும் ஆளை மயக்குகிறது. அடுத்தாற் போல், அவளது அதரங்கள்.

முருக்கம்பூ மொட்டு அரும்பியும், அரும்பாமலும் இரண்டுங் கெட்டான் நிலையிலிருந்து அழகைத் தூவுகிறவேளை எவ்வளவு ரமணீயமா யிருக்கும்? அதைப்போல இருந்தன, அவளது மாதுளம் முத்தின் சிவப்பை யொத்த செவ்விதழ்கள். அவளது நெற்றியோ, ரோஹிணியின் புன்னகையில் மயங்கி, வானத்திலே தொங்கு ஊஞ்சலாடும் மூன்றாம் பிறையைப்போல ஒளி பொருந்தியிருந்தது. வளைத்து, நாணேற்றி எய்வதற்குத் தயாராக இருக்கும் வில்லை நினைப்பூட்டுகின்றது, அது.

திருந்து பூ முருக்கின் அரும்பு போலிருக்கும்
இதழினாள்—வரிச்
சிலையைப்போல் வளைந்து, பிறையைப்போல் இலங்கு
நுதலினாள்.

கண்ணும், கொண்டையும், நுதலும், இதழும் முடிந்தது. இன்னும் அந்த முகத்திலுள்ளதோ?......அவளது புருவம்-ஆம்-அதுவும் அழகில் இம்மி கூடக் குறையவில்லை. மனதில் எழுகின்ற ஆசை வெறியை ஒரே நொடியில் 'ஒரு வெற்பு நொறுங்கிப் பொடிப் பொடியாவது போல்' தொலைத்து விடக்கூடிய சக்தியுள்ள புருவங்கள், அவை. அவளது பருவமோ் உருண்டு, திரண்டு, கர்வம் நிறைந்து, திமிறி நிமிர்ந்து பார்க்கும் மங்கைப் பருவம். உள்ளத்தின் துள்ளலும், உவகையின் பெருக்கும் அந்தப் பருவத்தில் கர்வங்கொண் டிருக்கும். இதற்கும் மேலே அவளது சொல்லின் சுவை. கரும்புச் சாற்றையும், அருமருந்தாகிய அமிர்தத்தையும் வடித்தெடுத்த இளம்பாகு மொழிகள், அவளது சொற்கள். அந்தச் சொற்கள் வருடி வருகின்ற பற்களின் ஒளியோ சொல்லி முடியாதது. "எற்றி நுரை கக்கியொரு பாட்டிசைக்கும்" கடலில் மிதந்து, கரையில் தள்ளப்படும் ஆணி முத்தினங்களை வரிசையாகக் கோத்துப் பதிப்பித்தது போல்வன, அந்தப் பல் வரிசை,

அரம்பை தேச வில்லும் விரும்பி ஆசை கொல்லும்
புருவத்தாள்
அறிவை மயக்கும் ஒரு கருவம் இருக்கும் மங்கைப்
பருவத்தாள்,
கரும்புபோல் இனித்து மருந்துபோல் வடித்த
சொல்லினாள்—கடல்
கத்தும் திரை கொழித்த முத்துநிறை பதித்த
பல்லினாள்.

பல்லழகைக் கூறியதைக் கேட்டது, அந்த மூக்கு. உடனே, "அடடா. அப்படிப் பட்டதா?" என்று அந்தப் பல்லின் முத்து நிலா விரிப்பை எட்டிப் பார்க்கிறது, அவள் மூக்கு. அந்த மூக்கு எப்படிப் பட்டது? ஹம்ஸ பேஸரி தரித்த அந்த மூக்கில் ஒரு ஒளி முத்து ஊசலாடிற்று. கடைசியில் முக அழகு எல்லாவற்றையும் சேர்த்து ஒரே யடியில் சொல்லி விடுகிறார், கவிஞர்:

பல்லின் அழகை எட்டிப்பார்க்கும் மூக்கில் ஒரு
முத்தினுள்—மதி
பழகு வடிவுதங்கி அழகு குடிகொளும்
முகத்தினுள்.

சந்திரிகை பழகுவதற்கும் அழகுக்கு இருப்பிடமென்று ஒன்று இருப்பதற்கும் என்றே அமைந்தது, அவளது திருமுகம் என்கிறார் கவி. முகத்தழகு முடிந்தது. இனி மற்றைய அழகைக் கவனிக்க வேண்டியதுதான்.

மரத்தோடு மரமாய் ஒட்டியிருக்கும் இளங்கமுகம் பாளையின் வழவழப்பையும் மிஞ்சி இலங்குகிறது, அவளது கண்ட சரம் பூண்ட கழுத்து. அவளது தொய்யில் எழுதிய மார்பின் விம்மலும் நம்மை இழுக்கிறது. அவளது கரங்களோ? வயிரக் கற்கள் பதித்த கடகஞ் செறிந்த கைகள்; தாமரைக் கரங்கள். சரி. சித்திரத்தைப் பார்ப்போம்:

வில்லுப்பணி பூணைந்து வல்லிக்கமுகை வென்ற
கழுத்தினுள்—ஜகம்
விலையிட்டெழுதி இன்ப நிலையிட் டெழுதும் தொய்யில்
எழுத்தினுள்
கல்லுப்பதித்த தங்கச் செல்லக் கடகமிட்ட
செங்கையாள்.

இப்படியே போகிறது வருணனை. பாற்கடலில் வெடித்துப் பிறந்த அமுத மொத்தமேனியும், காதல் பாலுக்கு, சீனி போன்ற அவளது அழகும், அவளது கொடி போன்ற லாகவமும் புலவர் கவியழகில் இயங்குகிறது. இந்த இயலழகு திரிகூட ராஜனை ஈசனைக் கூட், மயக்கி விடுகிறதாம்; அவனது உறுதியான உள்ளமும் உருகுகிறதாம்.

வெடித்த கடலமுதை எடுத்து வடிவுசெய்த மேனியாள்—ஒரு
வீமப்பாக மொத்த காமப்பாலுக் கொத்த சீனியாள்
பிடித்த சுகந்தவல்லிக் கொடிபோல் வசந்தவல்லி பெருக்கமே—சக்தி
பீடவாசர்திரி கூடராசர் சித்தம் உருக்குமே!

* * * * *

முழுப்பாட்டையும் தாளலயம் தவறாது பாடிப் பார்த்தால், திரிகூடராசர் உள்ளம் மட்டுந்தானா உருகும்? நமது மனமும் வஸந்த ஒய்யாரியின் 'வெடித்த கடலமுதை எடுத்து வடிவு செய்த' அழகைக் கண்டு உருகத்தான் செய்யும்!

# காதரின் தியாகம்

(மு. ச. உசைன் முனவ்வர்பேக்.)

அஃது திடீரென்று உண்டாயிற்று. காதரின் மனது அவ்விடம் அப்படி லயித்தது அவனுக்கே ஆச்சரியமாய் இருந்தது. "வந்தாய், என் மனம் புகுந்தாய், மன்னி நின்றாய்" என்றாரே ஆழ்வார், அது அவன் விஷயத்தில் உண்மையாயிற்று. கங்காதரன் சாதாரண இளைஞன். புதியன எவையும் அவனிடம் காணப்படவில்லை. சாமள வண்ணன். இரண்டொரு மாதங்களுக்குள் அவர்கள் நட்பு வளர்ந்து திமிர்ந்தது. காதரை சிறிது பொழுது பார்க்காவிட்டாலும், கங்கை அவன் வீட்டுக்கு ஓடுவான், அவனை அணைத்துக் கொள்வான். "கங்கை! கங்கை" என்று காதர் கூப்பிட்டால் அதற்கு மறுமொழியே கிடையாது. அப்பொழுது அவர்கள் கனவுலகிலே தமை மறந்து உலவினார்கள்.

ஒருநாள் மாலை மணி ஆறாகியும் கங்கை, காதர் வீட்டுக்கு வரவில்லை. மனம் பதறிய காதர் பிராம்மணர் வீதிக்கு விரைந்தோடினான். தன் விதவை யன்னையுடன், கங்கை அங்கே குடியிருந்தான். கதவு மூடி இருந்தது. "கங்கா" என்று கூப்பிட்டான். "யாரது?" என்று கேட்டுக்கொண்டே, ஒரு அம்மையார் வந்து கதவைத் திறந்தனர். அவர் கங்கையின் அன்னையாகத்தான் இருக்குமென்று காதர் யூகித்துக் கொண்டான். தன் ஆருயிர்த் தோழனைப் பெற்றவள், என்று நினைத்த அளவானே, அவனுக்கு, அவளிடம் ஒரு அன்பு உண்டாயிற்று. சிவபெருமானுக்கு பிட்டு தந்த வந்தியை, பாண்டியன் கூற்றாக பரஞ்சோதிமுனிவர் கூறும்;

"அன்னையிலா உனக்கிவளோர்
அன்னையாய் வந்தாளோ!"

என்ற ஓரடி அவன் ஞாபகத்துக்கு வந்தது. வந்தி ஆளாக வந்து தன் கைப்பிரம்பால் அடியும் பட்டவர், ஆலவாயின் அவிர் சடைக் கடவுளே என்றறிந்து பாண்டியன் நொந்து அலறும்போது தொனிக்கும் சிறுமையும், அவ்வருள் விளையாட்டின் அருமையும், அவன் அகக்கண் முன் காட்சி யளித்தன. வட்டிலிலும், தொட்டிலிலும், மார்மேலும், தோண்மேலும் வைத்து, அவனைக் காதலித்துத் தாலாட்டிப் பாலூட்டும், அன்னையின் அன்பை அறியாத அவனுக்கு, தாய்மையை விளக்க இறைவனே அனுப்பிய தாய் தானோ என்ற ஐயமும் எழுந்தது.

"அம்மா" என்று கூப்பிட்டான். அவ்வம்மையார் மறுமொழியே தரவில்லை. கதவைத் திறந்தபடியே விட்டு, உள்ளே சென்று விட்டார்கள்.

"யாரோ துலுக்கன் வந்து நிக்கறான்" என்ற சொற்கள் உள்ளிருந்து வந்தன.

"சாப்ட்ரேன், வந்துட்டேன்" என்ற கங்கையின் குரல் அவைகளைத் தொடர்ந்தன.

"ஆபீஸில் சித்த நாழியாச்சு. அதான் வல்லே" என்று கூறிக்கொண்டே கங்காதரன் வெளியில் வந்தான். இருவரும் கட்றக்கரைக்குச் சென்றார்கள்.

அன்று அமாவாசை. பார்ப்பனர்கள் தர்ப்பணம் பண்ணுவார்கள் என்பது, அப்பொழுதெல்லாம் காதருக்குத் தெரியாது. அன்று காலையில் மருத்துவச்சாவடிக்கு சென்ற காதர் பிராம்மணர் வீதி வழியே திரும்பினான். கங்காதரன் வீட்டுக்குச் சென்று வழக்கம்போல் கூப்பிட்டான்; அன்று கதவு சிறிது திறந்தே இருந்தது. ஒரு விநாடிகாலம் பதிலே இல்லை.

"அபசாரம்! அபசாரம்! ராமா! ராமா!" என்று கங்கையின் தாயார் கூறியவை அவன் காதுகளில் விழுந்தன. ஒரு சமயம் பூஜையில் சொல்லவேண்டிய வேதமாயிருக்கும் என்று, அச்சொற்களை பொருள் படுத்தாது, நின்றுகொண்டேயிருந்தான். திடீரென்று கதவை மூடி யாரோ தாளிட்டார்கள். "துலுக்கானை இன்னிக்கு பிராமணாள் பார்க்கமாட்டா" என்ற தீயுமிழ் சரங்கள் அவனை வந்து தாக்கின. அவன் தலை சுழன்றது. தூய்மை நிறைந்திருந்த அவன் நெஞ்சம், அச்சொற்களை ஆய மறுத்தது. உள்ளத்தில் ஒரே கொந்தளிப்பு—பெரிய போராட்டம்—. கங்கையும் காதரும், அன்று மாலை முழுதும் அழுதுகொண்டேயிருந்தார்கள். நீல விசும்பும், குரைகடலும், பசுந்தரையும், புல்வெளியும், காதருக்கு அன்று ஒரு புதிய பாடத்தை கற்பிக்கத் தொடங்கின. சிந்தனை உலகினின்றும் இழிந்து, உலகை காதர் நோக்கியபோதுதான்—சமூக வாழ்வின் கருத்து—அதன் வரம்புகள்—அவனுக்கு புலப்படலாயின. அவர்கள் அன்பு ஆளவாய்க்குரங்கு ஆட்டிய கூத்தே போன்றது. அதற்கு தாள பேத முணர்தல் இழுக்கு. உண்ணவோ, உறங்கவோ, உடன் பழகவோ முடியாத ஒரு தொடர்பு என்ற ஒரு உண்மை அவனுக்குத் தெரிந்தவுடன், காதருக்கு கோபமும், ஆத்திரமும் பீறிட்டுக்கொண்டு வந்தன. பொருளற்ற இத்தளைகளை வெட்டி வீழ்த்துவது என்று சபதம் செய்து கொண்டான்.

"கண்ணீர் மல்கச் சாகிற்பிற் சாக்கா
டிரந்துகோட் டக்க துடைத்து."

என்று தமிழ்மறை குறிக்கும் சாவை, கங்கையின் கண்ணீர் மல்கும், தன் சாவாக, ஏழைக்காதர் உருவகித்து மகிழ்ந்தான். இளமையின் புது மணத்தை நுகர்ந்த காதர், முடிவின் மறுமணத்தை நுகர வெறுத்தான்.

2

தகுந்த செவ்வி வாய்த்த போதெல்லாம், கங்கையின் தாயாருடன் வாதம் செய்வதற்கு காதர் முயன்றான்.

"ஏன் அம்ம! கல்வியிலோ, உத்தியோகத்திலோ அழகிலோ, உங்கள் பிள்ளைக்கு நான் எப்படி கீழானவன்" என்று கேட்பான். "என்னவோ! அதெல்லாம் நேக்குத் தெரியாது; பிராமணாள் தான்

ஒசத்தி. வேதத்திலேயே எழுதி வெச்சிருக்காளே!" என்று விடை யிறுப்பாள்.

"சபரியின் எச்சிலை சர்வேஸ்வரன் பிரியத்துடன் ஏற்றுக் கொண்டான். கண்ணப்பன் ருசி பார்த்துக் கொடுத்த பன்றி மாம்ஸம் இறைவனுக்கு அமுதினும் மேலாக இருந்தது. கலப் பற்ற அன்பு மாலைதான் இறைவனுக்கு பிரீதியே யன்றி அது யார் மாலை யென்று அவன் பார்ப்பதில்லை" என்று காதர் கூறினால், "அதுக்கெல்லாம் வேத வியாக்யானம் வேறே இருக்கு. உன் பேச்சை கேட்டதே விழுப்பு" என்று ஸ்நானத்திற்கு ஓடி விடுவாள்.

"நீங்கள் தாராளமாக ஆசாரமாக இருங்கள். ஆனால் என்னை மனுஷ்யனாக எண்ணுங்கள்" என்றால், "மௌனம் கலக நாஸ்தி" என்று வாளா இருந்து விடுவாள்.

சமூகம் பிணித்த தளைகளை வெட்டி வீழ்த்துவது எளிதான கருமம் அல்ல என்று காதர் உணர்ந்த போதினும், அவற்றிற் காக கங்கையும் தானும் பிரிந்து விடுவதும் முடியாது என்று பட்டது. "சீனக்கா செல்லக்கிட" என்ற பொய்யாமொழியின் உருவத் தோற்றம் அவன் முன்வந்து நிற்கும். விண் வழங்கிய அமுதை, தனியே சுவைக்க மறுத்து, சோழனுக்குத் தூது போக்க அன்னச்சேவலை அழைக்கும் பிசிராந்தையின் குரல் அவன் காதுகளில் ஒலிக்கும்.

"பொன்றுக்கவோ, கோக்கவோ" என்று அரவக்கொடியேன் கன்னனுக்கு அளிக்கும் அன்பலங்கல், காதரின் உணர்ச்சித் திரைகளிலே, மெல்ல மிதந்து வரும்.

3

காதரும், கங்கையும் பம்பாயில் ஒரே "ஆபீஸில்" அலுவலில் அமர்ந்தார்கள்.

"உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு."

என்பதற்கு மேற்கோளாகவே அவர்கள் வாழ்க்கை அமைந்திருந் தது. சின்னாளில் கங்காதரனுக்கு மணமுடித்து வைக்கப்பட்டது. காதரை அவன் வருந்தி அழைத்த போதிலும், தன் நண்பன் இடுக்கண்கட்கு ஆளாக நேரிடும் என்றுன்னி, அவன் செல்ல மறுத்து விட்டான். ஐந்து ஆண்டுகள் மறைந்தன. கங்கை இரு குழந்தைகளுக்கு தந்தையுமானான்.

ஒருநாள் காதர் 'ஆபீஸில்' அழைத்தபோது ஒரே அமளி யாக இருந்தது. கங்கையை ஊர்ப் பாதுகாவலர் ஏதோ கேட்டுக் கொண்டிருந்தனர். ஆராய்ந்தபோது, அந்த 'ஆபீஸ்' தலைவர் கை யெழுத்தைப் போன்று, பொய்க் கையெழுத்திட்டு ஒரு 'செக்' மாற்றப்பட்டதாகவும், அக் குற்றம் கங்காதரன் பேரில் சுமத்தப் பட்டிருப்பதாகவும் தெரிந்தது. பேதைமை பிறழ்ந்து காதரை அவன் பார்த்த பார்வை அவன் குற்றமற்றவன் என்று அவ னுக்கு அறிவித்தது. அவனை மறியல் வீட்டுக்கு கொண்டு

சென்ற மறுநாள், காதர் அங்குப் போய் அவனைப் பார்த்தான். கங்கை, அவனை அணைத்துக்கொண்டு 'ஓ' வென்றழுதான். தன் குழந்தைகளை காப்பாற்றுமாறு இறைஞ்சினான்.

அக் கொடிய காட்சியை நட்பின் நயம் தெரிந்த நம்பி, எவ்வாறு பொறுப்பான்? கங்கையை விட்டுப் பிரிந்ததும் காதர் நேரே ஊர்க்காவற் சாவடிக்கு சென்று, பொய்க்கை யெழுத்திட்டவன் தானே யென்று, ஒப்புக்கொண்டான். கங்கை விடுதலை செய்யப்பட்டு, காதர் ஐந்து ஆண்டுகள் கடுங்காவல் தண்டனைப் பெற்றான். கங்கையும் அடிக்கடி சென்று அவனைப் பார்த்து வந்தான். இரண்டு ஆண்டுகட்குப் பிறகு, கங்கை சென்னை மண்டலத்துக்கு மாற்றிக்கொண்டு, காதரிடம் விடை பெற்றுச் சென்றான். இரண்டொரு கடிதங்கள் எழுதினான். பிறகு அவையும் நின்றுவிட்டன.

4

வாழ்க்கை யெனும் உருளை உருண்டோடிற்று. இருபது ஆண்டுகள் ஓடி மறைந்தன. புரப்போர் புரந்தனர்; இரப்போர் இரந்தனர். உலகம் இயங்கியது. வறுமையால் வாடிய ஒரு ஏழை திருச்சியின் தெருக்களில் ஐயமேற்றுத் திரிந்தான். கிழிந்த கைலியும், ஒரு குல்லாயுமே அவன் அணிந்திருந்தான். ஒலியற்ற இருமல் அவன் உடம்பை ஒடுக்கி யிருந்தது. ஒரு வீட்டின் முன் நின்று "அம்மா! பிச்சை போடுங்க" என்றான்.

ஒரு பார்ப்பனச் சிறுவன் அவ்வீட்டு இடைக்கழியில் (ரேழி) விளையாடிக் கொண்டிருந்தான். உள்ளே இருந்து, ஒரு விசிறியுடன் ஐயர் வெளியில் வந்தார். விபூதியும், தங்கப் பூணிட்ட உருத்திராட்சமும் அவர் உடம்பை அழகு படுத்தின.

"கீழார் கோவணமும், திருநீறு மெய்பூசி உந்தன்
தாளே வந்தடைந்தேன் தலைவா."

என்று புலவன் தந்த ஓவியம், இவரைப் போன்றதோ? அல்லவோ? என்ற ஐயம் ஏழையின் மனத்தே எழுந்தது.

"நகந்து போடா" என்று பிச்சைக்காரனை அதட்டினார் ஐயர்.

பிச்சைக்காரன் திடுக்குற்று நிமிர்ந்தான்.

"என்னைப் பார் கங்கை. நான் காதரல்லவா?" என்று பிச்சைக்காரன் அலறினான்.

விளையாடிக் கொண்டிருந்த சிறுவன் பிச்சைக்காரனை அண்மினான்.

"ஏலே அம்பி! அவனைத் தொடாதே. அவன் தீட்டுடா" என்றார் ஐயர்.

குழந்தை உள்ளே ஓடியது.

"ஹூம்," என்ற தொனியுடன் ஐயரும் உள்ளே போனார்.

பிச்சைக்கார காதர் தெருவூடே சென்றான். அவன் கண்கள் நீரைக் கக்கின.

"கண்ணீர் மல்கச் சாகில்" என்ற பொய்யாமொழியை அவன் வாய் முணுமுணுத்தது.

# மனம் கவர்ந்த பெரியாழ்வார்

("ஹரன்")



## 2. யசோதைப் பிராட்டியும் தமிழ்த்தாயும்

மேற்கு முகட்டினில் இந்திர ஜால வித்தைகளைச் செய்து கொண்டிருந்தான் சூரியன். அவனைச் சுற்றிலும் வானத்தில் வெள்ளிப் படகுகள் போன்ற சிறு மேகங்கள் அகன்று கொண்டு அவனுடன் உறவாடுவன போன்று காட்சியளிக்கின்றன. எங்கள் ஊர்க் காவிரிப் பாலத்தின் மேல் அமர்ந்து அந்தத் துல்லியமான, சித்தத்தை மயக்கும்படியான காட்சியைப் பார்த்துக்கொண்டிருந்தேன்.

கீழே பாலத்தின் கீழ் 'சோ' என்ற இரைச்சலுடன் ஓடும் காவிரி நதி. அந்த நதி மேற்கிலிருந்து வளைந்து வரும் வனப்புடன், அதன் மேல் தவழ்ந்து விளையாடுபவன் போன்று தோன்றினன் சூரியன்.

"**காவிரி** தென்பெண்ணை பாலாறு............"

—என்றார் கவிச் சக்கரவர்த்தி. அவருள்ளத்தைக் கவர்ந்து, அந்தக் காவியப் பொன்மாளிகையினின்றும் சிதறும் கவிதைப் பொற்கதிரில் முதலாக நின்று ஒளிரும் நேர்மையினை—அணியினை—படைத்தாள் எங்கள் காவிரி, '**வான் பொய்ப்பினும் தான் பொய்யா மலைத் தலைய காவிரி**' என்றெல்லாம் எண்ணினேன்.

நளவெண்பாவில்,

"வையம் பகலிழப்ப வான மொளியிழப்ப
பொய்கையு நீள்கழியும் புள்ளிழப்ப—பையவே
செவ்வாய அன்றில் துணையிழப்பச் சென்றடைந்தான்
வெவ்வாய் விரிக்திரோன் வெற்பு"

என வரூஉம் புகழேந்திப் புலவனார் கற்பனைத் திறமும் ஈண்டு எண்ணத் தகுவதாகும்.

என்ன! நமது பூமி பகலிழக்கின்றதா? ஆமாம்! நள்ள் காலத்தில் அத்தகைமை சர்வசாதாரணமான இயற்கை நிகழ்ச்சியாகும். ஆனல், இப்போது—நமது பூமி பகலை இழக்கும் போது—வெவ்வாய் விரிக்திரோன் அஸ்தமன கிரியைச் சென்றடைகின்றான். எவ்வாறு? வானம் ஒளியிழக்கும் படியாகச் சென்றடைகின்றான்!

ஆமாம்! வானம் என்றால் இப்போது எனக்குத் தமிழ்ப் புலமை வானம் தான் அகத்தே ஒளிபெற எழுகின்றது. **அகத்தே தான்!** "ஆஹா! அக்காலத்தில் இவ்வானம் எவ்வளவு அரிய

பேற்றினைப் படைத்து ஒளியுற்றிருந்தது! எக்காலத்தும் தமிழ்த் தாய் என்ற ஞாயிறு அவ்வானத்திடை அன்புடன் வீற்றிருந்து, அஃதை ஒளிபெறச் செய்து எத்தகை இன்பத்தினை நுகர்ந்திருந்தாள்!” என்று நான்—(இப்போது அந்த அரிய ஞாயிறு, மெல்ல மெல்ல தமிழ் நாடு பகல், ஒளி எனு மிவைகளை இழக்க மறையவிருக்கும், தேசு இல்லாத வானம் நீங்கலாக)—அவ்வானத்தை அகத்திடை உதயமாக்குவதில் ஐய மென்ன?

உடனே உள்ளத்திடை உதயமாகிறார் பெரியாழ்வார்:

“செண்பக மல்லிகையொடு செங்கழுநீ ரிருவாட்சி
எண்பகர் பூவும்கொணர்ந்தேன் இன்றிவை சூட்டவாவென்று
மண்பகர் கொண்டானை யாய்ச்சிமகிழ்ந்துரை செய்தவிம்மாலை
பண்பகர் வில்லிப்புத்தூர்க்கோன் பட்டர்பிரான் சொன்னபத்தே!”

[எண்பகர்பூ—எண்ணிச் சொல்லப்பட்ட புஷ்பங்கள்; எங்கு இன்னின்ன தகைமைகளைப் படைத்த சாஸ்திர வித்தருமாகிற புஷ்பங்கள் என்றுங் கூறலாம்.]

யசோதைப் பிராட்டி, “கிருஷ்ணா! இவ்வளவு புஷ்பங்கள் வைத்திருக்கிறேனே, இவைகளை என் குழலில் நீ சூட்டினால்தான் அவை மணத்திலும் குணத்திலும் அதிகப்படும். அவைகளின் பரிமள கந்தத்திடை என் கூந்தலின் அழகும் பன்மடங்கு அதிகமாகும்!” என்ற தனது உள்ள இச்சையினை, “இதோ, செண்பகம மல்லிகை செங்கழுநீர் புஷ்பங்கள் இருவாட்சி முதலானவைகள்! கண்ணா! பண்புடன் பூச்சூட்ட வருவாயாக!” என வெளிப்படுத்தி அழைக்கின்றாள்.

தாய்மையின் தகைமை இதில் தெளிவாகிறது. ஆனால் நான் ஒரு படி மேலேயே போகிறேன். அந்தப் பாலத்தில் உட்கார்ந்து கொண்டு மாலைச் சூரியனின் மாண்பினை எண்ண ஆரம்பித்த நான், என் உள்ளத்தை—உஷத் காலத்தில் இன்பச் சுழலில் சுழன்ற உள்ளத்தை—ஏனோ, இப்போது சோர்வினை அடையவிட்டுவிட வேண்டும்?

பாருங்கள்! “தீ மலர்களை—கவிதை மலர்களை—செண்பகம், மல்லிகை போன்று பல பகுதிகள் இன்னும் பாமாலை கோத்து அம்மாலை என் கழுத்தில் சூட்டப்பட விருக்கும் அநேக பொன் மலர்களை—என் கூந்தலில் சூட்டி, எனக்கு ஹாரமாக அணிவிக்கா விட்டாலும்,—இதோ, பழந்தமிழ்ப் புலவர்கள் திருவடிகள் என்று சொல்லும் படியான என் கால்களின் மேலும், குழலிலும், கழுத்திலும் இடப்பட்டிருக்கும் “தமிழ் மலர்களை”ச் சிறிது வாசனை பாரேன்!” என்று தமிழ்ச் செல்வி கூறுவது போன்றல்லவா எனக்குத் தோன்றுகின்றது.

ஆஹா! அந்த யசோதைப் பிராட்டிக்குக் கண்ணன் மலர் சூட்ட வருவதாக ஒளிரும் கவிதைப் பாவத்தில், நாம் நமது

(172-ம் பக்கம் பார்க்க.)

# ஜ்யோதிஷ பல ரகஸ்யம்

(சி. பி. ஆனந்தம்.)



## 17 சனி உலகின் பலங்கள்

**ச**னிக் கிரகம் பொதுவில் பாபக் கிரக (Malific Planet) மாகவே கருதப்படுகிறது. இந்த நிலையில் அதன் ஸ்திதி ஒரு ஜாதகத்தில் ஒன்று நான்கு ஏழு என்னும் **கேந்திரங்** களில் இடம் பெறுவது தீய பலனுக்குரியதே. ஆனால், அதற்கு நற்பல ஸ்தானங்களுக்கு ஆதிபத்யம் (Powers) வாய்க்க அதன் பலன் நன்மையாகவே இருக்கும். மேலும் அந்த நன்மைகள் சனி இடம் பெறும் ஸ்தானங்கள் அதற்கு ஆட்சி-உச்ச-மூலத் திரி கோணங்களாக விருப்பின், விசேஷங்களுக்குரிய பலங் கொண்ட தாக ஆகிறது.

ஐந்து-ஒன்பது என்னும் திரிகோணங்களில் சனிக்கு ஸ்திதி கிடைக்க, அதன் பலன் சம கஷ்டங்களுக் குடையதாக விருக்கும். எட்டு-பனிரெண்டு என்னும் மறை விடங்களில் சனி இருக்க, தீய பலன்கள் தாம் சொல்லக் கூடியது. **வக்ரகதி** (Retrograde) யில் அப் பலன்கள சுப பலத்தில் வலுக் கொண்டிருக்கும்.

மூன்று-ஆறு-பத்து-பதினொன்று என்னும் உபஜெயங்களில் சனி இடம் பெறுமேல், ஆயுள் விருத்தி-தாரசுகம்-காம்பீர்யம்-ஏக போகம்-தன சம்பத்து-சத்துருவை ஜெயித்தல்-தைர்ய விலாஸம்-பிரபுத்வம்-பிரபலம் (Reputation - Fame)-ஞானாஸ்ரயம் ஆகிய பலன்களில் உயர்ந்ததாகக் கூறவேண்டும்.

ஸ்வசார (பூசம்-அனுஷம்-உத்திரட்டாதி இந்த நக்ஷத்திரங் களில் ஸ்திதி பெறும்) வலு சுபபலன்களில் சிறந்திருக்கும். சத் துருக் கிரகங்களான புத-சுக்ரர்களுடைய சாரங்களைத் தவிர ஏனைய அனைத்தும் சுபகர முடையனவே. இதில் சுப ஆதிபத்ய முடைய கிரகங்களின் சாரமெனில், மேலும் அச்சுபங்கள் விசேஷ தரத்தில் உன்னதங் கொண்டிருக்கும்.

**ஆதிபத்யங்கள்:**—உதய லக்னம் முதல் பனிரெண்டு பாவங்களில் கேந்திர ஸ்தானங்களுக்கு—அதாவது-ஒன்று—நான்கு-ஏழு-பத்து இந்த பாவங்களுக்கு ஆதிபத்யம் சனிக்கிரகத்திற்கு வாய்ப்பது நலம். ஐந்து-ஒன்பது என்னும் கோணங்களுக்கு ஆதிபத்யம் கிடைத்தால், சமபலனுக் குரியதாக் விருக்கும். மற்ற பாவங்கள் எதற்கு வாய்ப்பினும் தீய பலனே நிகழும். ஆயினும், சனிக் கிர கத்திற்கு இரண்டு இராசிகள் ஆட்சி விடுகளாக விருப்பதால், இரண்டு பாவங்களுக்கு ஆதிபத்யம் இருக்கும். இந்த இரண்டு ஆதிபத்யங்களில் நலமுள்ள ஒன்றினால் தீயதான மற்றொன்றின் பலன் சமன மடையும். கேந்திர-கோணம் இரண்டுக்கும் ஆதி பத்யம் நேருவது மிகு சுப மென்பர். ஆனால், இவற்றில் ஒன் றுக்கு பாதாகாதிபத்யம் (Power of Disturbance) நேரின், மிகு

சுப பலன்கள் கெடுகிலும் தட்டுத் தடைகளுடன் மிகவும் பாதை (Disturbing effects) கொண்டதாக விருக்கும். ஆதிபத்ய ரீதியாக நேரும் சுபபலன்களின் பலம் ஆட்சி-உச்ச-மூலத்ரிகோணங்களில்—உபஜெய ஸ்தானங்களில் வாய்க்கும் ஸ்திதி வலுவினால் அதிகம் புஷ்டி கொண்டதாக விசேஷ தரங்களில் சிறக்கும்.

ஸம்பந்தம்—சனிக்கு மற்றக் கோள்களின் சேர்க்கை பலங்களில் உண்டாகும் பலன்கள் இங்கு கவனிக்கப் பெறுகிறது. புதன்-சுக்ரன் இவ் இரு கிரகங்களும் சனிக்கு சத்ரு பாவங் கொண்டவை. ஆதலால், இவை இரண்டையும் தவிர ஏனைய கிரகங்களின் சேர்க்கை பலம் பெருக்குவன வாகும். ஒரே பாகையுள் வாய்ப்பன மட்டுமே 'conjunction (d)' என்னும் சேர்க்கை ஸம்பந்தமாக மேலை நாட்டினர் கொள்கின்றனர். நம் நாட்டுக் கிரந்தங்களிலும் அவ்விதம் ஒரே பாகையுள் வரும் சேர்க்கையை குரு-சனி கிரகங்களுக்கு மட்டும் மிகு விசேஷங் கொண்டதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. 'குரு-சனி ஒரு பாகையுள் கூடில் மூனிவர் ஆயுள் பெற்றிடுவர்' என்று தீர்க்காயுளுக்குப் பலத்தை நம் முன்னோர் கண்டிருக்கின்றனர். மற்றப்படி சேர்க்கை பலத்திற்கு ஒரு கிரகம் நிற்கும் பாகை இடத்திற்கு முன்னும் பின்னும் பதினைந்து பாகைகள் மட்டும் எல்லையாகக் கொள்வது பலனுக்குச் சரியாக விருக்கும். இதில் ஒரு ராசியுள்ளேயோ அல்லது பாவத்துள்ளேயோ அவ்வெல்லை அடங்கி யிருக்கவேண்டு மென்பதில்லாமல் கணக்கிடுவது சேர்க்கை பலத்தைக் காணுவதற் குரியதாகும்.

பார்வைகள்—(Aspects).—சனிக் கிரகத்திற்கு இதர கிரகங்களைப் போல பொதுவான ஸமஸப்தம—(நேர் ஏழுக்கு ஏழாம்) பார்வை உண்டு. இது மற்றவைகளுக்கு இருப்பது போன்ற சாதாரணப் பார்வைதான். ஆனால், இதற்கு அங்காரகன்—குரு இந்தக் கிரகங்களுக்கு இருப்பதுபோல விசேஷப்பார்வை சில இடங்களுக்கு இருக்கிறது. அவை மூன்றும் - பத்தாம் இடங்களுக்குக் கிடைக்கும் பார்வைகளாகும். "வென்றி தருங் கோட்கெல்லாம் பக்கப் பார்வை" என்ற வாக்யப்படி சனிக்குள்ள இந்த விசேஷப் பார்வைகள் பலன் தருவதில் வலு மிகுந்தன. இவற்றுள் முன்னது உபஜெயப் பார்வை யென்றும், பின்னது கேந்திரப்பார்வை யென்றும் சொல்லப்படும். உபஜெயப் பார்வைக்கு பாகை 60லும் கேந்திரப்பார்வைக்கு பாகை 270லும் அவற்றுக்குரிய பூரண பலம் நிறைந்திருக்கும். இந்த பாகை இடங்களுக்கு முன்னும்—பின்னும் பதினைந்து பாகைகள் மட்டும் அந்தப் பார்வைகளுக்குரிய எல்லைகளாகும். எனவே, இந்த எல்லையுள் அமையும் கிரகங்களும்-பாவங்களும் அந்தப் பார்வைகளின் பலன்களுக்கு உரியதாக ஆகின்றன. பலன் தருவதில் முக்கியங் கொண்டதென பலபாகம் கூறும் குரூரதி பஞ்சக் கிரகங்களைப்பற்றிய விவரங்கள் யாவும் சுருக்கமாக இத்துடன் முடிவாகிறது. இனி, மேலைப்புலவர்கள் சமீபத்தில் கண்ட யுரேனஸ்-நெப்டியூன்-ப்ளூட்டோ ஆகிய கிரகங்களைப்பற்றிய விவரங்களை அடுத்த இதழ் முதல் விவரிப்போம்.

# சொற் சாதுர்யங்கள்

(கு. ராஜாராம்.)

தமிழ் நாட்டில் சாதுர்யமாகப் பேசுவதில் வல்லவர்கள் எத்துணையோ பேர் இருந்திருக்கின்றனர். புலவர்களில் சிலர் எப்பொழுதும் சமத்காரமாகவும், சிலேடையாகவும் பேசுவர். புலவர்களே யல்லாது சாதாரண மானவர்களும் அவ்விதம் பேசியிருக்கின்றனர். குறிப்பிடத் தக்க சில சிலேடைகளையும், சமத்காரப் பேச்சுகளையும் நீங்கள் புத்தகங்களின் மூலம் படித்திருப்பீர்கள்.

இதுவரை வெளிவராத சில சொற் சாதுர்யங்களை நான் கேள்விப்பட்டிருக்கிறேன். உண்மையாகவே நிகழ்ந்தவை. ருசிகரமானவையுங் கூட. எனக்குத் தெரிந்த சொல் வேடிக்கைகளில் சிலவற்றைக் கீழே கதை ரூபமாகக் கொடுத்திருக்கிறேன்.

1

சங்கரன் பிள்ளை ஒரு சிறந்த புலவர். நல்லறிஞர். பேசுவதில் மிகவும் சமர்த்தர். ஒரு சமயம் அவருடைய மனைவி வீட்டிற்கு விலக்கமாக இருந்தபோது, சட்டியில் மாவு வறுத்துக் கொண்டிருந்தார்.

அப்பொழுது அவருடைய நண்பரொருவர் வந்தார். இவர் மாவு வறுத்துக் கொண்டு அடுக்களையில் கிடப்பதைப் பார்த்துக் கேலி பண்ணும் பாணியில், "சங்கரன் பிள்ளை, சட்டியில் மா வறுக்கின்றீரே!" என்று கூறினர்.

உடனே புலவர், "சங்கரன்—சிவபெருமானுடைய, பிள்ளை—பிள்ளையாகிய முருகன், சட்டியில்—சஷ்டியன்று (கந்தசஷ்டி), மா—சூரபத்மனை, அறுப்பது—பிளப்பது சகஜந்தானே!" என்று நண்பர் கூறிய வார்த்தைகளுக்கே பொருள்கூறி சமத்காரமாக மொழிந்தார்.

வந்த நண்பர் பெரிதும் மகிழ்வுற்று, "ஆஹா! தங்கள் வன்மையை என்னென்று கூறுவேன்!" எனக் கூறி மகிழ்ந்தாராம்!

2

மதுரை ஜில்லாவிலுள்ள பேரையூர் ஜமீன்தார் ஒரு அறிவாளி. அவருக்கு ஒரு அருமையான மைத்துனர் இருந்தார். இவரும் மிகுந்த சமர்த்தர். இருவரும் மைத்துனன்மார்கள் என்ற முறையில் மிகவும் தமாஷாகப் பேசிக் கொள்வர்.

ஒரு நாள் ஜமீன்தார் அருமையான காளைகள் பூட்டப்பட்ட ஒரு வில் வண்டியில் 'ஜம்' மென்று வந்து கொண்டிருந்தார். கடைத் தெருவில் வண்டி சென்று கொண்டிருக்கும் பொழுது எதிரே அவருடைய மைத்துனர் ஏறி வந்த வண்டியைச் சந்திக்க நேர்ந்தது. இரு வண்டிகளும் ஒரு செட்டியாரின் ஜவுளிக் கடைக்கு முன்னால் 'சக்' என்று மோதுவது போல் எதிரும் புதிருமாக

ன்றன. கடைத்தெரு அவ்வளவு அதிக அகலமில்லாததால், ஒரு வண்டி ஒதுங்கி விலகினால் தான் எதிரே வரும் வண்டி செல்ல முடியும்.

ஜமீன்தார் விலகிப் பாதை விடமாட்டேன் என்றார். மைத்துனரும் விலக மாட்டேன் என்றார். ஐந்து நிமிஷங்கள் வரை இரண்டு வண்டிகளும் அப்படியே நின்று கொண்டிருந்தன. வேடிக்கை பார்க்கக் கூட்டம் கூடி விட்டது.

கடைசியில் ஜமீன்தார், "நீங்களும் வழி விடமாட்டேன் என்கிறீர்கள்; நானும் மாட்டேன் என்கிறேன். வாருங்கள், செட்டியார் கடைக்கு முன்னால் மல்லுக் கட்டுவோம்" என்றார்.

உடனே மைத்துனர், "சரி, வாருங்கள் செட்டியார் கடையில் ஆளுக்கொரு கிளாஸ்கோ 'மல்' வேஷ்டி எடுத்துக் கட்டுவோம்" என்று சாதுர்யமாகப் பகன்றார்.

ஜமீன்தார் 'கல கல' வென்று சிரித்தார். பின்னர், "மெச்சினேன் மைத்துனரே" என்றார்.

"ரொம்ப வந்தனம். போதும் விளையாட்டெல்லாம்" என்று கூறி வழி விட்டார் மைத்துனர்.

"யார் ஜெயித்தது?" என நகர்ந்து கொண்டிருக்கும் வண்டியிலிருந்தே கேட்டார் ஜமீன்தார்.

"என்ன இருந்தாலும் ஜமீன்தாரல்லவா!" என்று பதில் வந்தது.

வண்டிகள் தத்தம் வழி சென்றன.

### 3

ஒரு வேதியர். அவருக்கு வலது கால் நொண்டியாயிருந்தது. அதனால் அவர் அக்காலைச் சுழற்றிச் சுழற்றி நடப்பார். அவர் அவ்விதம் நடப்பதனால் 'சுழட்டி', 'சுற்றுக்கால்' என்று பட்டப் பெயர்கள் ஏற்பட்டன.

ஒரு நாள் தம் வீட்டுத் திண்ணையிலமர்ந்து ஏதோ ஒரு புத்தகத்தை வாசித்துக் கொண்டிருந்தார். அது பொழுது ஒருவன் தோளில் சாக்கு ஒன்றைப் போட்டுக் கொண்டு, கையில் ஒரு படியுடன் வந்தான். வந்தவனுக்கு ஒரு கண் குருடு.

வந்து நின்றவனைப் பார்த்து, "என்ன வேண்டும்? நீங்கள் யார்?" என்று கேட்டார் வேதியர்.

அவன், "நான் அசலூர். நெல் வாங்க வந்தேன். உங்களை விவரம் கேட்டுப் போக வந்தேன். உங்க சுத்துக்காலிலே கலத்துக்கு எத்தனை படி என்று சொல்வீர்களா?" என்றான்.

அவரைக் கேலி பண்ணும் நோக்கத்துடன் 'சுத்துவட்டாரம்' என்பதற்குச் 'சுத்துக்கால்' என்று கூறி அவருடைய நொண்டிக் காலைப் பற்றி மறைவாகக் குறிப்பிட்டான்.

இதை யெல்லாம் அறியக் கூடாதவரா அவ்வேதியர்! பதிலுக்குப் பதில் மண்டையிலடிக்க வேண்டு மென்று எண்ணினார்.

உடனே வேதியர், "உங்கள் பொட்டைப் படியாலே நாற்பத்தெட்டுப் படி" என்று ஒரு போடு போட்டாரே பார்க்கலாம்!

வந்தவன் முகத்தைப் பார்க்க வேண்டுமே!

## 4

முகம்மதியர் ஒருவரும், ஆசாரியார் ஒருவரும் நெருங்கிய சிநேகிதர்கள். இருவரும் தமாஷாகப் பேசுவது வழக்கம். முகம்மதியர் ஒரு பாய் வியாபாரி.

ஒரு நாள் ஆசாரியார் தம் நண்பரின் கடைக்குச் சென்றார். முகம்மதியர் வரவேற்றுப் பின், "தங்களை ஒரு பெரிய ஆசாரியனாகப் பாவிக்கிறேன்" என்று விளையாட்டாகக் கூறினார்.

'ஆசாரி' என்று தம் குலத்தைக் குறிப்பிடுவதை அறிந்து கொண்டார் ஆசாரியார். பதிலுக்கு வேடிக்கை பண்ண எண்ணி, "அப்படியே பா விக்க வேண்டும்" என நண்பரது மொழிகளையே பிரித்துக் கூறி, அவர் பாய் விற்கும் தொழிலைக் குறிப்பிட்டார்.

பின் இருவரும் சிரித்தனர் என்று கூறவும் வேண்டுமோ?

---

(167-ம் பக்கத் தொடர்ச்சி)

அன்னைக்கு மலர் சூட்டப் போகும் நல்ல வருங் காலத்தை யன்றோ என் மனம் விழைகின்றது!

**"பட்டர்பிரான் சொன்ன பத்தே!"**

ஆமாம்! பட்டர்பிரான்—பெரியாழ்வார்—இந்தப் பத்து அரிய மலர்களை—நமது சித்தத்தினை முற்காலப் போக்கினில் கவர்ந்து, தற்கால நமது நிலையை உணரும் சிந்தையினைப் பயக்கும் அரிய மலர்களை—தமிழ்த்தாயின் இணைந்த திருவடிகளுக்குச் சாத்தி விட்டார்! அவளுக்கு ஹாரமாக்கி விட்டார்! அவளது குழலை அதன் மூலம் அணி பெறச் செய்து விட்டார்!

யசோதைப் பிராட்டியின் **இன்பம்**, "அழகிய கிருஷ்ணனே! மலர்கள் இதோ வைத்திருக்கிறேன். சூட்ட வா!" என்கிறது. நமது தமிழ்த்தாயின் **சோர்வு**, "தமிழர்களே! மலர்களைச் சூட்ட வாருங்கள்; இல்லாவிடில் என்னிடமிருக்கும் மலர்களின் மேன்மையறிந்து அவைகளை 'உலகெலாம் பரவும் வகை செய்தலு'க்கு உன்னுங்கள்!" என்கிறது.

அந்தக் கண்ணன் யசோதைக்குப் பல விதத்தில் இன்பம் கொடுத்திருக்கிறான். **இந்தத் தமிழர்கள் என்ன செய்கிறார்கள்?**

இவ்வகையில் பெரியாழ்வாரை **"வருங் காலம் உரைக்கும் ,விரவக,** என்று சொல்லலா மல்லவா?

# வார்தா நினைவுகள்

("சமூகத்தொண்டன்.")



(சென்ற இதழின் தொடர்ச்சி.)

திரு. மாசிலாமணி முதலியார் அவர்களால் நடத்தப்பட்டு வரும் வாலாஜாபாத் இந்துமத பாட்சாலை இதே குறிக்கோளுடன் தான் வேலை செய்து வருகிறது. யான் முதல் முதலாய் ஆறு திங்களுக்குமுன் அப் பள்ளியைச் சென்று பார்த்த போது எனக்கேற்பட்ட மகிழ்ச்சிக்கு அளவே யில்லை. இது, மகன்வாடியைப் பார்த்துதான் இவ்வாறு நடக்கிறதா ? அல்லது மகன்வாடி தான் வாலாஜாபாத் பள்ளியைப் பின்பற்றுகிறதா வென்னும் ஐயமும் வந்து விட்டது. நான் வாலாஜாபாத் இந்துமத பாடசாலையை மகன்வாடியுடன் ஒப்பிடுவதில் சற்று ஏற்றத்தாழ்வு இருக்கக் கூடும். ஆனல், மகன்வாடியின் குறிக்கோள் என்னவோ, அதுவேதான் வாலாஜாபாத்துக்கும். அதே பாடத் திட்டந்தான் இங்கும். இதேபோன்று கோயமுத்தூருக் கருகில் திரு. அவிநாசி லிங்கம் செட்டியார் அவர்கள் பார்வையில் நடத்தப்படும் பள்ளியும் ஒன்றென அறிகின்றேன். வட ஆற்காடு ஜில்லாவிலுள்ள திருப்பத்தூரில் ஒரு கிருஸ்துவ சகோதரரும், மேலூரிலுள்ள விவேகானந்த ஆசிரமமும் இவ்விதப் பள்ளிகளை நடத்துவதாய்க் கேள்வி.

இது நல்ல நாள்! மக்கள் விழிப்படைந்து வருகின்றனர். அவர்கள் உண்மை நாகரிகத்தை வளர்க்க அடி கோலி விட்டனர். பாரதநாடு உலகத்தின் குருபீடமாய் விள்ங்கப் போவதென்னவோ உண்மை.

இவ்வாறு, மகன்வாடியை, நாட்டின் மாண்டுபடும் கைத் தொழில்களுக்கு உயிரளிக்க வல்லதாய் ஆக்கிய அடிகள், இதை நடத்தி வைக்க திரு. டாக்டர் குமரப்பா அவர்களைத் தேர்ந்தார் என்று கூறினேன். ஆகவே திரு. டாக்டர் குமரப்பா அவர்களை வாசகர்க்கு அறிமுகம் செய்து வைப்பது கடமை யாகின்றது.

## டாக்டர் குமரப்பா யார்?

திரு. டாக்டர் ஜே. சி. குமரப்பா அவர்களைத் தென்னிந்தியர் என்று சொல்வதினும், தமிழர் என்று சொல்லுதல் மிகவும் தகுதியாகும். திரு. குமரப்பாவின் முன்னோர்கள் குட்குநாட்டைத் தாயகமாகக் கொண்டிருந்தார்கள். ஆனல், திரு. டாக்டர் குமரப்பாவின் தவத்தாய் தமிழ் மகள். அவர் திருநெல்வேலிச் சீமையைச் சேர்ந்த ஓர் உயர்குடியிற் பிறந்தவர். இவரைப்பற்றி நான் குறிப்பாய் ஒன்றும் சொல்லக் கூடாவிடினும், தமிழ்த்தாய்மார்களில் மிகச் சிறந்தவரெனக் கொள்வது மிகவும் தகுதி. இவர்

இளமை தொட்டு நல்ல கல்வியறிவுடையோராய் இருந்தார். கல்வியோடு சிறந்த சீலமும், உயர்ந்த கொள்கையு முடையவராய் இருந்து வந்ததால், அவர் திருவயிற்றுதித்த செல்வமக்களெல்லாம் தன்னலமற்ற தியாகிகளாய் நாட்டின் பணிக்குத் தங்களையொப்படைத்துக் கொண்டு வாழ்கிறார்கள். எனினும், மகன்வாடியைப் பற்றி எழுத வந்த நான், அங்கு தேசப்பணியில் தொடர்புடைய இருவரைப் பற்றி மாத்திரம் தெரிவிப்பது போதும். இந்த இருவரும் தான் ஜே. சி. குமரப்பாவும் பி. சி. குமரப்பாவு மாவர். இருவரும் டாக்டர்கள். டாக்டர்கள் என்பதினால் மருத்துவக் கல்லூரியில் பயின்று பட்டம் பெற்றவரன்று: முன்னவர் Doctor of Economy (பொருளாதாரக் கலையில் டாக்டர்); பின்னவர் Docter of Philosophy (சாத்திரத்தில் டாக்டர்).

திரு. J. C. குமரப்பாவும், திரு. B. C. குமரப்பாவும் உடன் பிறந்தவர்கள். இவர்கள், இளமைக் கல்வியும் உயர்தரக் கல்வியும் தமிழகத்தில் பயின்றனர். பின்னர் மேலும் பயில ஐரோப்பாவுக்குச் சென்று இரண்டொரு பல்கலைக் கழகங்களில் பயின்று இருவரும் எம். ஏ. பட்டம் பெற்றனர். பின்னர் திரு. ஜெகதீசன் குமரப்பா அவர்கள் பொருளாதாரக் கலையில் டாக்டர் பட்டம் பெற்றார். திரு. பரதன் குமரப்பாவோ B. D. என்னும் பாதிரிப் பட்டமும், சாத்திரக் கலையில் டாக்டர் பட்டமும் பெற்றார். ஆக, இவ்வாறு இரு உடன் பிறந்தாரும் கல்வித் துறையில் இமயமலை உச்சியைப் போன்று, உயர்ந்த தகுதியை யடைந்தனர்.

பிறகு, டாக்டர் திரு. ஜெகதீசன் குமரப்பா அவர்கள் அமெரிக்காவிலிருந்த கணக்குப் பரிசோதனை (Public-Auditors) கம்பெனி யொன்றில் கணக்கராய்த் தொழில் புரியலானார். அதுபோழ்து அவர், அத்துறையில் அரிய ஆராய்ச்சிகள் செய்து, பல அரிய பொருளாதார நூல்களையும், கணக்கு வேலை சம்பந்தமான நூல்களையும் எழுதி, "சிறந்த நூலாசிரியர்" என்ற பேற்றையும் அடைந்தார். அச்சமயம் அவர் பெற்று வந்த ஊதியம் மாதம் ஒன்றுக்கு 1800 ரூபாய்க்கு மதிப்பிடக் கூடியதாம். இவை யெல்லாம் 1930 ஆண்டுகட்கு முன்.

இவ்வாறு இருந்து வருங்காலை, அடிகள் காங்கிரஸ் இயக்கத்தில் சேர்ந்து, நாட்டைச் சுதந்தரப் பாதையில் திருப்பி, தம்முடைய கொள்கைகளை யெல்லாம், உலகப் புகழ்பெற்ற தமது "யௌவன இந்தியா"வில் எழுதி வரலானார். "கற்றாரைக் கற்றாரே காமுறுவர்" என்றபடி திரு. டாக்டர் ஜெகதீசன் குமரப்பா அவர்களுக்கு அந்நாட்டி லிருந்தபடியே அடிகள் கொள்கைகளின் உன்னதத் தன்மையை உணர்ந்து வந்தார். நாளடைவில் அடிகள் இலட்சியங்களும், தாய் நாட்டின்பால் டாக்டருக்குத் தோன்றிய அன்பும் சேர்ந்து அவரைப் பிறந்த நாட்டிற்கு அழைத்தன. குமரப்பா அடிகளுக்குக் கடிதம் எழுதி அவர் கருத்தையும்

அறிந்து கொண்டு, தமது உத்தியோகத்திற்கு ஒரு வணக்கம் கூறி அமெரிக்காவை விட்டுப் புறப்பட்டார்.

தாய் நாட்டை யடைந்ததும் டாக்டர், தமது கலைப் பெருக்கை நாட்டிற்குப் பயன்படுத்தக் கருதி பம்பாய் நகரில் இருக்கும் வர்த்தகக் கல்லூரியில் பேராசிரியராய்த் தொண்டாற்றினர். ஆனால் அங்கும் அவர் அதிக காலமில்லை; அவர் சபர்மதியை யடைந்து ஆசிரமத்தி லிருக்கும்போது, அடிகள் மனத்தை ஈர்த்துக் கொண்டார். அப்போது உப்பு சத்தியாக்ரஹம் தொடங்கிற்று. திரு. டாக்டர் குமரப்பாவும் சத்தியாக்ரஹம் புரிந்து வெள்ளை அரசாங்கத்தின் விருந்தினரானர்.

பிறகுதான் மகன்வாடி வரலாறு தொடங்குகிறது. அ. இ. கி. கை. சங்கத்தை நிறுவி, அதன் செயலாளராய் அல்லும் பகலும் அருந்தொண் டாற்றுகிறர், ஜே. சி. குமரப்பர்.

தமது காரியாலயத்தை யடுத்த அந்தச் சிறு குடிலில் திரு. டாக்டர்: ஜெகதீசன் குமரப்பா கடுந்தவம் புரிகின்றார். அவர், தம் போக வாழ்வை வெறுத்து விட்டார்; ஓர் சாதாரண கிராமத்தான் போல் எளிய வாழ்க்கை நடத்துகிறர். தமது சிறிய குடிலில் இருந்து கொண்டு பரந்த தாய் நாட்டுக் குடிசைத் தொழிலை வளர்த்து, உலகத்தை அதிசயிக்கச் செய்ய வேண்டு மென்று கனவு காண்கிறர் அவர்.

அன்று அயோத்தியைத் துறந்து அட்வி சென்ற அண்ணுவின் அடிச்சுவடு பற்றிச் சென்றான் அரசு துறந்து பரதன். அவ்வாறே அண்ணுவின் இலட்சியமே தமது குறிக்கோளாய்க் கொண்டு, டாக்டர் பரதன் குமரப்பாவும் தம்மை அன்னை பாரத தேவியின் திருவடிகளில் ஒப்படைத்துக் கொண்டார். அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்கத்தின் செயலாளர் என்னும் பொறுப்பில் திரு. ஜெகதீசன் குமரப்பா அவர்கள், ஆண்டில் பல மாதங்கள் ஆராய்ச்சியின் நிமித்தம் இந்தியாவின் பல பகுதிக்கும் சென்று விடுகிறர். ஆகவே, அவர் அலுவல்களை திரு. பரதன் குமரப்பா அவர்களே உதவிச் செயலாளர் என்ற முறையில் செய்து வருகிறர்.

இந்த டாக்டருக்கு வாழ்க்கைத் துணைவியாராய் அமைந்திருப்பவர் திரு. சீதாதேவி யென்னும் அம்மையார். இவர், சென்னை உயர்தர நீதி மன்றத்தில் நீதிபதியாக விருந்து, இப்போது உபகாரச் சம்பளம் பெற்று வரும் திரு. தேவதாஸ் அவர்களின் மகளாராவர். இவர் மேல் நாட்டில் எம். ஏ. பட்டமும், பாரிஸ்டர்—அட்—லா என்னும் பட்டமும் பெற்று, சென்னை உயர்தர நீதி மன்றத்தில் வழக்கறிஞராய்த் தொழில் புரிந்து வந்தவர். ஆனால், இப்போதோ மகன்வாடியில் இருந்து கொண்டு தொண்டாற்றுகிறர்! இவ்வாறு, ஒரு தமிழ் நாட்டு உயர் குடும்பம் எழுநூறுயிரம் இந்திய கிராமங்களுக்குப் புத்துயிர் அளிக்கும் பணியில் படிந்து கர்மயோகம் புரிவது தமிழருக்குத் தலையாய பெருமையாகும். அன்றோ!

(தொடரும்.)

தொடர் கதை.

# தேவ தேவி

(வத்றுப்-சு. மீ. கணபதி)



(சென்ற இதழின் தொடர்ச்சி)

இந்த நிலையில் வரன் வேட்டையாடி வந்த வாசுவின் தகப்பனார் இவர்கள் வீட்டிற்கு வந்தார். ஜாதகம் பொருந்தி யிருந்தது. ஆனால் அவர்கள் கேட்ட தொகையை நினைத்துப் பயந்தார். காந்தன் பார்க்க அழகாகவு மிருந்தான். பதினைந்து நாட்களில் பதில் சொல்வதாகத் திரும்பி விட்டார். வாசு அப்பொழுது பி. ஏ. முதல் வகுப்பு படித்துக் கொண்டிருந்தான். அவனிடமும் கலந்து யோசித்தார்: "நீ ஆண்பிள்ளை. நான் பதினைந்து ரூபாயில் வேலைக்குச் சேர்ந்து இப்பொழுது அறுபது ரூபாய் வாங்குகிறேன்; என் காலமெல்லாம் சிரமப்பட்டு பதினைந்து ஆயிரம் பாங்கியில் வைத்திருக்கிறேன். நீயும் கஷ்டப்பட்டு மீதம் செய்வதற்குப் பிரயாசை எடுத்துக் கொள்வதாகச் சொன்னால் இந்தப் பணத்தைக் கமலத்தின் மணத்திற்குச் செலவு செய்கிறேன். அவள் நல்ல நிலைமையி லிருக்கப் பார்ப்பது நம்முடைய கடமை" என்றார். வாசுவும் இவர் கூறியவற்றிற்கெல்லாம் தலையசைத்தான். அதன் பின்புதான் ஸ்ரீ காந்தனுக்கும், கமலாவுக்கும் நாம் முன் கூறி யிருக்கிறபடி வரதட்சிணை கொடுத்து, மணத்தை நிறைவேற்றி காந்தனைப் படிக்க அனுப்பினார்கள்.

கமலா நன்றாகப் படித்திருந்தாள். பேசுவதிலோ சங்கீதத்திலோ நல்ல பெயர் அவளுக்கு. நல்ல அழகியும் கூட. என்றும் செல்வமாக வளர்க்கப்பட்டு வந்தவள். தன் தகப்பனாரையும், தமையனையும் எப்பொழுதும் சுற்றிக்கொண்டே யிருப்பாள். படிப்பு முடிந்த பின்பு சமையல் வேலை செய்யத் தெரிந்து கொண்டாள். இவளுக்கு மணமாகும் பொழுது பதினைந்து வயது நிரம்பி யிருந்தது. இவளும் ஸ்ரீ காந்தனைப் பார்த்து சம்மதித்த பின்னர்தான் மணம் நிறைவேறிற்று. தன் கணவன் ஒரு கலெக்டராகத் தன் ஊர் திரும்புவான் என்பது தெரிந்தது முதல் அவள் மனதில் சிறிது வேறுபாடு தோன்ற லாயிற்று. கலெக்டர் என்றால் சாதாரண உத்யோகமா? அரசனின் பிரதிநிதியாக ஒரு ஜில்லாவை அரசாட்சி செய்யும் உத்யோகமல்லவா? தினம் இதுதான் அவளின் சிந்தனை. எப்பொழுது மூன்று வருடங்கள் முடிந்து திரும்பி வரப் போகிறார் என்ற எண்ணம்; இது சிறிது சிறிதாகத் தலைக்கு ஏறவே, தனக்கு இந்த வாழ்வைக் கொடுத்த தகப்பனையும், சோதரனையும் தன்னிலும் கீழான நிலையிலிருப்பவராகக் கருதத் தொடங்கினாள்; சில சமயங்களில் அவர்களால் தானே நமக்கு இந்த பாக்யமென எண்ணுவாள். உடனேயே மனம் மாறிவிடும். விதி கூட்டி விட்டது என நினைப்பாள். இப்படியே காலம் சென்று கொண்டிருந்தது.

எல்லோரும் எதை ஆவலுடன் எதிர்பார்த்தார்களோ அது சித்தித்தது! காந்தன் ஐ. ஸி. எஸ். பாஸ் செய்துவிட்டதாகவும், தான் புறப்படும் தேதியையும் இந்தியாவில் இன்ன தேதியில் பம்பாய்த் துறைமுகத்தில் இறங்குவேன் என்ற தந்தி வந்தது. இந்தச் சமயம் கமலாவின் தகப்பனார் ரிடையராகிவிட்டார். தான், வாசு, கமலா ஆகிய மூவருடன் காந்தன் பெற்றோர் வசித்துவந்த ராஜபுரி சென்று அவர்களையும் அழைத்துக் கொண்டு காந்தனை வரவேற்க குறித்த தினத்தில் துறைமுகப் பட்டினம் அடைந்தார்.

மிகுந்த குதூகலத்துடன் காந்தனை வரவேற்றனர்கள். கமலாவும், காந்தனும் ஒருவரை ஒருவர் மிகுந்த பிரேமையுடன் பார்த்துக்கொண்டனர். எல்லோரும் ராஜபுரிக்கே சென்றனர். ஆனந்தமாக சில நாட்கள் கழித்ததும், காந்தன், தன்னை சர்க்காரிடம் ஒப்புவித்துக் கொண்டான். அவனை சப் கலெக்டராக உத்திரவு கொடுத்தார்கள். வேலையை ஒப்புக் கொண்ட சிறிது நாட்களில் இல்வாழ்க்கையில் ஈடுபட்டான். வாசு அப்பொழுதே உத்யோகத்திலிருந்ததால் தன்னிடத்திற்குப் போய்விட்டான். மற்றவர்கள் எல்லாம் காந்தனுடனேயே இருந்தார்கள். பெற்ற வயிறு குளிர்ந்தது. காந்தனின் தகப்பனும், தான் எடுத்த முயற்சி நிறைவேறியது கண்டு மிகுந்த ஆனந்தமடைந்தார்.

காந்தன் பெற்றோரிடம் மிகுந்த பயபக்தியுடன் நடந்து வந்தான். ஆகவே, குடும்பம் பூராவும் நித்யானந்தம் அனுபவித்து வந்தது. காந்தன் வேலைக்கு வந்து மூன்று வருடங்களுக்குள் அவன் தாயும், தந்தையும் இறந்தனர். கமலா வீட்டின் எஜமானியானாள். எல்லாம் அவள் ஆலோசனையின்றி நடைபெறாது. இந்த மாதிரி சர்வாதிகாரம் கிடைத்த சின்னாட்களுக்குள் அவள் மனம் முற்றிலும் வேறுபாடடைந்தது. அதிலிருந்து அவள் எவரையும் மதித்துப் பேசுவதில்லை. அடிக்கடி தன் பெயர் பத்திரிகைகளில் வெளிவருவதையே ஆனந்தமாகக் கொண்டாள். அவளுக்கு பாலன் ஒரே குழந்தைதான். அவனுக்கு இப்பொழுது ஆறு வயது. வாசு வந்து சென்ற பின்பு கமலாவுக்கு சிறிது அறிவு வந்தது எனவே கூறுதல் வேண்டும். வாசு மொழிந்த ஒவ்வொரு சொற்களையும் ஆராய்ந்தாள். "உன்னை இந்த நிலைமைக்குக் கொண்டு வந்தவர் யார்?" இதைப் பலமுறை சிந்தித்தாள். "ஆம். வாசு கூறியது உண்மைதான். என் தகப்பனார் சம்பாதித்தது பூராவையும் என் வாழ்வுக்காக செலவு செய்திருக்கிறார். அவரைப் பாதுகாக்கவும், அவருடைய நலத்தைக் கவனிக்கவும் வேண்டியது எனது கடமை. அவர் எனக்காகப் பாடுபட்டிராவிடினும், புத்திரி என்ற ஒரு பாத்யதை இருக்கிறது. வாசுவுக்கு மணமாகி யிருந்தால் நம்மிடம் விட்டு வைத்திருக்கவேமாட்டான். தவிரவும் வாசு இல்லையெனில் நான்தானே அவருக்குச் செய்தல்வேண்டும். மகள் தந்தைக்குச் செய்யவேண்டிய கடனை இதுவரை செலுத்தாமலிருந்தது பெரிய மதியீனம். என் அறிவு எப்படியோ மழுங்கிவிட்டதே. என் மாமனார் இருக்கும் வரையில் என் தகப்பனாரை, எவ்வளவு அன்போடு நேசித்துவந்தார். தன் பிள்ளைக்கு, 'உனக்கு வந்திருக்கும் அந்தஸ்து இவரால்தான் ஏற்பட்டது. அவரை ஜாக்கிரதையாகக் கவனிக்கவேண்டும் என' அடிக்கடி கூறியதையெல்லாம் நான் கேட்டிருந்தும், அன்னிய மனிதரான அவருக்கு இருந்த அன்பில் ஒரு சிறிதுகூட சொந்த மகளாகிய நான் பாராட்டாது சாதாரணமாக நடந்துகொண்டேனே! எனக்கு இதற்குப் பரிகாரம் தேடும் வகை தெரியவில்லை. இனிமேலேனும் என் மனதை மாறாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். வாசுவிடம் நான் நடந்துகொண்டதைப் பற்றி என்ன நினைத்து வருந்தினனோ, நான் இவர்களுக்குத் துன்பம் செய்யவோ பிறந்தேன். வாசு இனி இங்கு வருந்தி அழைப்பினும் வருவானா என்பது சந்தேகம்தான். என்னுடன் அவன் பேசிக்கொண்டிருந்த பொழுது அவன் முகத்தில் சிறிதுகூட அருளில்லை. பயந்தவன் போன்று வருந்திய முகத்துடன் பேசினான். இப்பொழுது அவன் வருத்தம் கட்டுக்கடங்காது நிற்கும். முன்பு மிகவும் அன்பு ததும்ப கமலா என்று அழைப்பான். தற்சமயம் வந்து சென்றபோது பெயர் சொல்லி அன்புடன் அழைக்காமல் வேற்று மனிதருடன் பேசுவதுபோன்றல்லவோ நடந்துகொண்டான். அவனும் மிகவும் சாதாரணமான நிலைமையிலில்லை. நான் அவனுக்கு சமாதானம் என்னவென்று கூறுவேன். நான்

நடந்து கொள்வதை அனுசரித்து, இவரு மல்லவா என் தகப்பனாருடனும், அண்ணனுடனும் சாதாரணமாக நடந்துகொள்கிறார். என் மன நிலைமையைத் தெரிவித்து வாசுவிடம் முதலில் மன்னிப்பைப் பெறவேண்டும். கடிதம் எழுதினாலும் நம்பிக்கை பிறக்காது. சில நாட்கள் என் தகப்பனாருக்கு வேண்டியதை நானே கவனித்த பின்பு அவனை வரச்சொல்லி எழுதுவது தான் முறை. கடைசிவரை புது மனுஷியாக மாறிவிடவேண்டும். இவனையும் முன்போல் என் தகப்பனாரை நேசிக்கும்படி செய்தல்வேண்டும். இது வரை செய்துவந்த பாவத்திற்கு மன்னிப்பு கிடைக்கப்போகிறதா" எனப் பலவாறு எண்ணி வருந்திக்கொண்டிருந்தாள்.

காந்தன் ஆபீஸிலிருந்து திரும்பி வந்ததும் வழக்கம்போல் தன் மனைவி எதிர்படாததைக் கண்டு அவளைத் தேடிக்கொண்டு சென்றான். அவள் கண்களில் நீர் துளிப்பதையும், சோர்ந்து உட்கார்ந்திருப்பதையும் பார்த்து வருந்தினான். இந்த நிலையில் இதற்கு முன்பு அவளைப் பார்த்ததில்லையாதலால் சிறிது பிரமைகொண்டு நின்றுவிட்டான். அதே சமயம் பள்ளிக்குச் சென்றிருந்த பாலனும் இவர்களிருந்த அறைக்குள் ஓடிவந்தான். தன் கணவன் அங்கு வந்திருப்பதைக் கமலா அறியவில்லை. பாலன் ஓடிவந்த சப்தம் அவளுக்கு நினைவைக் கொடுத்தது. முகத்தைத் துடைத்துக் கொண்டு பாலா என்று புன் சிரிப்புடன் கூறிக்கொண்டே எழுந்தவள் தன் கணவன் நிற்பதைக் கண்டு திடுக்கிட்டாள். காந்தனும் சமீபம் சென்று உட்கார்ந்தான். பாலன் தாயின் மடியில் தலையை வைத்துக் கொண்டு சாய்ந்து நின்று கொண்டிருந்தான்.

“கமலா சிறிது நேரமிரு. இதோ வருகிறேன்” எனக் கூறி காந்தன் சென்று கையில் காமிராவை எடுத்துவந்தான். “எங்கே சிறிதாகச் சிரிக்க வேண்டும். ஒரு படமெடுக்கிறேன்” என்றான். கமலா முகத்தைத் துடைத்துக்கொள்ளப் பார்த்தாள். அவன் அனுமதிக்காமல் தான் விரும்பியபடியே புகைப் படம் ஒன்று எடுத்தான். இது ஏன் என கமலாவ்க்குப் புரியவில்லை. முதலில் ஆகாரம் செய்துகொள்ளுங்கள் எனக் கூறினாள். அது முடிந்த பின்பு காந்தன் அவள் வருத்தத்தின் காரணம் என்ன எனக் கேட்டான்.

“வாசு வந்திருந்தபொழுது நாமிருவரும் அவனிடம் நடந்துகொண்ட விதத்தைப் பற்றி அவன் என்ன நினைந்து வருந்துகிறானோ என்பதுதான் என் கவலை. நான் அறிவற்று சகோதரன் முறையில் அவனைச் கவனிக்கவில்லை என்றாலும் நீங்களாவது அவனிடம் சரியாக நடந்துகொண்டிருக்கக் கூடாதா? உங்களால் அவனுக்குத் துன்பம் செய்ய முடியும் என்று நான் கூறியபொழுது, அவன் மனம் வெறுத்து, தனி மனிதனாய் உள்ளவரை வேலைபோய்விட்டது என்று கவலைப்படமாட்டேன் என்றான். அப்பொழுது கூட என் மனம் மாறவில்லை. இப்பொழுதே என் மனம் கடந்ததைப் பற்றிச் சிந்தித்தது.”

“நீ கூறுவது விசித்திரமாயிருக்கிறதே! என்போன்ற ஒருவரின் கீழ் அவன் சாதாரணமான குமாஸ்தாவாயிருக்கிறான். அவன் கர்வமின்றி பேசியிருந்தால் உன் சகோதரன் என்பதற்காக அவனுக்கு எவ்வளவோ நன்மைகளையும் செய்யப் பார்ப்பேன். வேலைப் போவதைப் பற்றிக் கவலையில்லை என்று கூறுவதெனில் அவனுக்கு அசாத்ய கர்வமிருப்பதாகவே தெரிகிறது. அவனுக்குப் பரிந்து நீ பேசுவது வேடிக்கையாயிருக்கிறது”.

(தொடரும்)

## சுபானு ௵ ஐப்பசி௴ நவக்கிரக * நிராயன சுத்த ஸ்புடம்

(இந்தியா ஸ்டாண்டர்ட் கடியாரமணி-சென்னை காலை 7-மணிக்கு)

| தேதி | நக்ஷத்திர ஹோரை | | | சூரியன் | | சந்திரன் | | அங்காரகன் | | புதன் | | குரு | | சுக்கிரன் | | சனி | | †ராகு | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ம | நி | ச | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க |
| | | | | | | | | | | | | | | | | (வ) | | | |
| 1 | 1 | 42 | 10 | 180 | 20 | 56 | 25 | 58 | 40 | 165 | 32 | 119 | 23 | 138 | 34 | 63 | 38 | 109 | 10 |
| 2 | 1 | 46 | 06 | 181 | 23 | 68 | 44 | 58 | 32 | 167 | 07 | 119 | 32 | 139 | 13 | 63 | 37 | 109 | 07 |
| 3 | 1 | 50 | 03 | 182 | 25 | 81 | 04 | 58 | 47 | 168 | 43 | 119 | 41 | 139 | 52 | 63 | 36 | 109 | 03 |
| 4 | 1 | 54 | 00 | 183 | 28 | 92 | 57 | 58 | 54 | 170 | 21 | 119 | 50 | 140 | 33 | 63 | 35 | 109 | 00 |
| 5 | 1 | 57 | 57 | 184 | 31 | 104 | 50 | 59 | 00 | 172 | 00 | 119 | 59 | 141 | 14 | 63 | 33 | 108 | 56 |
| 6 | 2 | 01 | 53 | 185 | 34 | 116 | 39 | 59 | 05 | 173 | 40 | 120 | 08 | 141 | 27 | 63 | 32 | 108 | 53 |
| 7 | 2 | 05 | 50 | 186 | 36 | 128 | 28 | 59 | 09 | 175 | 20 | 120 | 16 | 142 | 41 | 63 | 30 | 108 | 49 |
| 8 | 2 | 09 | 46 | 187 | 39 | 140 | 33 | 59 | 13 | 177 | 01 | 120 | 24 | 143 | 26 | 63 | 29 | 108 | 46 |
| 9 | 2 | 13 | 43 | 188 | 41 | 152 | 38 | 59 | 16 | 178 | 42 | 120 | 32 | 144 | 12 | 63 | 27 | 108 | 42 |
| 10 | 2 | 17 | 39 | 189 | 44 | 165 | 12 | 59 | 17 | 180 | 23 | 120 | 40 | 144 | 59 | 63 | 25 | 108 | 39 |
| 11 | 2 | 21 | 36 | 190 | 47 | 177 | 47 | 59 | 18 | 182 | 04 | 120 | 48 | 145 | 47 | 63 | 23 | 108 | 35 |
| 12 | 2 | 25 | 32 | 191 | 50 | 190 | 54 | 59 | 18 | 183 | 45 | 120 | 56 | 146 | 36 | 63 | 21 | 108 | 32 |
| | | | | | | | | (வ) | | | | | | | | | | | |
| 13 | 2 | 29 | 29 | 192 | 52 | 204 | 01 | 59 | 17 | 185 | 26 | 121 | 04 | 147 | 25 | 63 | 19 | 108 | 28 |
| 14 | 2 | 33 | 25 | 193 | 55 | 217 | 35 | 59 | 15 | 187 | 06 | 121 | 12 | 148 | 16 | 63 | 17 | 108 | 25 |
| 15 | 2 | 37 | 22 | 194 | 57 | 231 | 10 | 59 | 12 | 188 | 46 | 121 | 19 | 149 | 07 | 63 | 14 | 108 | 21 |
| 16 | 2 | 41 | 18 | 196 | 00 | 245 | 00 | 59 | 08 | 190 | 25 | 121 | 27 | 149 | 59 | 63 | 12 | 108 | 18 |
| 17 | 2 | 45 | 15 | 197 | 02 | 258 | 54 | 59 | 03 | 192 | 05 | 121 | 34 | 150 | 51 | 63 | 09 | 108 | 14 |
| 18 | 2 | 49 | 11 | 198 | 05 | 272 | 55 | 58 | 57 | 193 | 43 | 121 | 41 | 151 | 44 | 63 | 07 | 108 | 11 |
| 19 | 2 | 53 | 07 | 199 | 07 | 286 | 56 | 58 | 51 | 195 | 22 | 121 | 48 | 152 | 38 | 63 | 04 | 108 | 07 |
| 20 | 2 | 57 | 03 | 200 | 10 | 301 | 03 | 58 | 44 | 197 | 00 | 121 | 55 | 153 | 33 | 63 | 01 | 108 | 04 |
| 21 | 3 | 01 | 00 | 201 | 12 | 315 | 10 | 58 | 36 | 198 | 38 | 122 | 01 | 154 | 28 | 62 | 58 | 108 | 01 |
| 22 | 3 | 04 | 56 | 202 | 15 | 329 | 18 | 58 | 27 | 200 | 15 | 122 | 08 | 155 | 24 | 62 | 55 | 107 | 58 |
| 23 | 3 | 08 | 53 | 203 | 18 | 343 | 26 | 58 | 17 | 201 | 52 | 122 | 14 | 156 | 20 | 62 | 52 | 107 | 54 |
| 24 | 3 | 12 | 49 | 204 | 21 | 357 | 24 | 58 | 06 | 203 | 20 | 122 | 20 | 157 | 17 | 62 | 49 | 107 | 51 |
| 25 | 3 | 16 | 46 | 205 | 23 | 11 | 22 | 57 | 55 | 205 | 05 | 122 | 26 | 158 | 15 | 62 | 46 | 107 | 47 |
| 26 | 3 | 20 | 42 | 206 | 26 | 24 | 54 | 57 | 42 | 206 | 41 | 122 | 32 | 159 | 13 | 62 | 43 | 107 | 44 |
| 27 | 3 | 24 | 39 | 207 | 29 | 38 | 26 | 57 | 29 | 208 | 17 | 122 | 38 | 160 | 11 | 62 | 39 | 107 | 41 |
| 28 | 3 | 28 | 36 | 208 | 33 | 51 | 20 | 57 | 15 | 209 | 52 | 122 | 44 | 161 | 10 | 62 | 36 | 107 | 38 |
| 29 | 3 | 32 | 33 | 209 | 38 | 64 | 15 | 57 | 00 | 211 | 27 | 122 | 49 | 162 | 10 | 62 | 32 | 107 | 35 |

**ஆகாயக் காட்சி:**—2உ முன் இரவு மணி 8-10க்கு சந்திரனுக்கு வடக்கில் பாகை 2-20க்கு **சனி சமாகமம்.** 7உ சந்திரனால் **குரு கிரகணம்** - பின் இரவு மணி 3-10க்கு மேல் காட்சிக் குரியது.

**பிரவேசங்கள்:**—5உ காலை மணி 10-02க்கு **குரு** கடகமிருந்து சிம்மத்திற்கும், 9உ பின் இரவு மணி 1-32க்கு **புதன்** கன்னியிலிருந்து துலாத்திற்கும், 16உ காலை மணி 7-28க்கு **சுக்ரன்** சிம்ம மிருந்து கன்னிக்கும், 28உ காலை மணி 9-01க்கு **புதன்** துலா மிருந்து விருச்சிகத்திற்கும் பிரவேசிக்கின்றன.

5உ புதன் கிழக்கில் **மகாஸ்தமனம்.** 13உ பிறபகல் மணி 3-0்க்கு அங்காரகன் **வக்ராரம்பம்.** 26உ முதல் **பாநுமத்யம்.**

*** அயனம்சம் பா-22 கலை-56 விகலை 24·1322 கூட்ட சாயன ஸ்புடம் வரும்.**

**† ஆறு ராசி அல்லது பாகை 180 கூட்ட கேது ஸ்புடம் வரும்.**

# " ஆனந்தபோதினி " பஞ்சாங்கம்.

சுபானு௵ ஐப்பசிமீ கலியுகாதி 5045, சாலிவாகனம் 1866
பசலி 1353, கொல்லமாண்டு 1119, ஹிஜிரா 1362
இங்கிலீஷ் 1943௵ அக்டோபர்மீ—1943௵ நவம்பர்மீ

| ஐப்பசிமீ | அக்டோபர்மீ / 1943௵ நவம்பர்மீ | வாரம். | திதி. | நக்ஷத்ரம் | யோகம். | விசேஷங்கள் |
|---|---|---|---|---|---|---|
| 1 | 18 | திங் | பஞ்25-17 | மிரு52-47 | அ52-47சி | துலா ஸ்நான ஆரம்பம் |
| 2 | 19 | செவ் | சஷ்27-35 | திரு57-35 | ம57-35சி | ரஸாயன-ஆராய்ச்சிகள் |
| 3 | 20 | புத | சப்30-37 | புன60-00 | சித்60 | திருதின ஸ்மிருக் |
| 4 | 21 | வியா | அ34-49 | ,, 3-11 | அமி60 | அசோகாஷ்டமி |
| 5 | 22 | வெள் | நவ40-13 | பூச9-37 | சி9-47ம | மந்திரார்த்தங்கள் |
| 6 | 23 | சனி | தச45-40 | ஆ15-36 | ம15-36அ | கரிநாள், சுபம் விலக்க [ஏகாதசி |
| 7 | 24 | ஞா | ஏ50-55 | மக21-37 | ம21-37சி | சர்வ-மத்வ ஏகாதசி, ராம |
| 8 | 25 | திங் | து55-17 | பூர27-33 | சித்60 | விருச்சிகாயனம்நா-21,வி-44 |
| 9 | 26 | செவ் | திர58-48 | உத்33-09 | அ33-09சி | தன த்ரயோதசி,பிரதோஷம் |
| 10 | 27 | புத | சசி60-00 | அ37-11 | ம37-40சி | மாஸ சிவராத்திரி, தீபாவளி நரக சதுர்த்தசி |
| 11 | 28 | வியா | சசி0-33 | சித்40-10 | சி40-10அ | அமாவாஸ்யை, கேதாரவிரதம் |
| 12 | 29 | வெள் | ●1-48 | சு41-24 | சித்60 | பலி பூஜை |
| 13 | 30 | சனி | பிர1-49 துதி59-57 | வி42-05 | சித்60 | கார்த்திக சுத்நம், யமத்வ தியா. யந்திரம் பயில |
| 14 | 31 | ஞா | திரு57-36 | அ41-19 | மர60 | அலோசன கௌரீ விரதம் |
| 15 | 1 | திங் | சது54-11 | கே39-37 | சித்60 | சதுர்த்தி விரதம்-நாக சதுர்த் |
| 16 | 2 | செவ் | பஞ்48-12 | மூல37-12 | அ37-12சி | ஆயுதம் பயிற்ற [தி |
| 17 | 3 | புத | சஷ்43-51 | பூர33-39 | அமி30 | மகா சஷ்டி-ஸ்கந்த சஷ்டி |
| 18 | 4 | வியா | சப்38-24 | உத்30-12 | சித்60 | |
| 19 | 5 | வெள் | அ32-27 | திரு25-51 | ம25-51சி | |
| 20 | 6 | சனி | நவ26-23 | அ21-33 | சி21-33அ | |
| 21 | 7 | ஞா | தச21-07 | சத17-23 | சித்60 | |
| 22 | 8 | திங் | ஏ15-35 | பூ13-50 | ம13-50சி | |
| 23 | 9 | செவ் | துவ10-47 | உட்10-43 | அ10-43சி | |
| 24 | 10 | புத | திர6-35 | ரே8-25 | மர60 | |
| 25 | 11 | வியா | சசி3-03 | அசு6-37 | அ9-37சி | பௌர்ணமி பூஜா விரதம் |
| 26 | 12 | வெள் | ப○0-41 பிர59-27 | ப✻6-03 | சித்60 | கார்த்திக பகுளம், கிருத்திகை விரதம் |
| 27 | 13 | சனி | துதி60-00 | கிரு6-41 | அமி60 | சாதுர் மாஸ்ய த்வதியா |
| 28 | 14 | ஞா | துதி0-33 | ரோ8-23 | சித்60 | வித்தியாநிதி புண்ய தீர்த்தம் |
| 29 | 15 | திங் | திரு1-48 | மிரு11-27 | அ11-27சி | சங்கட சதுர்த்தி, துலா ஸ்நானம் முடிவு |

| | | | |
|---|---|---|---|
| | | செவ் | சனி |
| கே | 5-சிம்-கு 9-துலா 13-வக்-செ [புத 16-கன் சுக் 18-விரு-புத | | குரு ராகு சுக் |
| | | சூரி | புத |

EDITED, PRINTED & PUBLISHED BY N. MUNISAWMY MUDALIAR,
AT THE " ANANDA BOOHINI " PRESS,
NO. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS.

# சர்வதேள் விஷ சஞ்சீவினி.

(ரிஜிஸ்டர் டிரேட் மார்க்)

**பட்டவுடனே விஷம் பறக்கும்!** அழுதவன் சிரிப்பான்!!

**இதில் குணமில்லையென்று நிரூபிப்பவர்களுக்கு 100-ரூபாய் இனாம்.**




நமது நாட்டிற்கு இது அவசியமாய் ஒவ்வொரு குடும்பத்திலும் சதா கையிருப்பில் இருக்கவேண்டிய ஓர் ஔஷதமாகும். இது ஆங்கில யூனானி தமிழ் வைத்திய நிபுணர்களால் நன்கு மதிக்கப்பட்டுள்ளது. இதை நாள்பட வைத்திருப்பதால் இதன்குணம் சற்றும் குறையாது. தேள், நட்டுவாய்க்காலி, செய்யான், பாம்பு, எலி முதலியவற்றின் விஷங்களை இரண்டொரு நிமிஷங்களில் இது அடியோடு நீக்கக்கூடியது. என்னைறிந்தோர் இதனால் சுகமடைந்திருப்பது பிரத்தியக்ஷ அனுபவமானதால் இதைப்பற்றி நாம் அதிகம் கூறவேண்டியதில்லை. இது இரண்டுவித மருந்துகள் அடங்கியது. இதை உபயோகிக்கும் முறை மருந்தோடு அனுப்பப்படும்.

விலை:—இரண்டுவித மருந்தும் அடங்கிய பாக்கெட் 1-க்கு அணா 8. தபாற் கூலி அணா 4. டஜன் 1-க்கு விலை ரூபா 5.

**ஏககாலத்தில் 3-பாக்கெட் வாங்குவோருக்குத் தபாற்கூலி இனாம்,**
**வியாபாரிகளுக்கு 100-க்கு 25 கமிஷன் கொடுக்கப்படும்.**

# மேஹ ராஜ சஞ்சீவி எண்ணெய்



இந்த எண்ணெயை ஒருமுறை மூன்றுநாள் சாப்பிட்ட மாத்திரத்திலேயே, கிரந்தி. மேக தாமரை, மேக நமைச்சல், மேக இரணம்; மேகப் புண், கால் கைகளிலே சேரும் மேக துர்நீர், மேக வெடிப்பு, எல்லா வகைகளான வெள்ளை, மூத்திரக் கருவியிலே தோன்றும் பலவித வியாதிகள் தீரும். அநேக காலமாக இருக்கும் வியாதிகளுக்கு ஒருமுறை சாப்பிட்டு, 15 நாள் பொறுத்து, மற்றொருமுறை சாப்பிடவேண்டும்.

3-நாள் எண்ணெய், புட்டி 1-க்கு ரூபா 1—8—0; மருந்து ஆர்டர் செய்யும்போது வியாதியின் பூரண நிலவரத்தை தெரியப்படுத்தவும்.

# சுகபேதி மாத்திரை

இந்த மாத்திரையில் 2-முதல் 5-வரை திரேக திடமறிந்து மாத்திரையைச் சாப்பிட்டு கொஞ்சம் ஜலம் சாப்பிடவும். இவ்விதம் சாப்பிட்டால் சுகமாய் பேதியாகிவிடும். மாத்திரையை அனுப்பும்பொழுது உபயோகிக்கும் முறை தெரிந்துகொள்ளலாம்.

25-மாத்திரை அடங்கிய புட்டி 1-க்கு விலை அணா 6.

---

**தனலட்சுமி கம்பெனி, நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.**

# காப் கியூர் என்னும் க்ஷய அரி



கப இருமல், இரைப்பு அல்லது மந்தகாசம், க்ஷயம், சளி, இருமல், கக்குவாய் இருமல், பெருத்த இருமல், தொண்டை நோய், சுவாசகாசம், கடினமான ஜலதோஷம், அபாயமான ஈழை இருமல், தொண்டை எரிச்சல், தொண்டைக் கரகரப்பு, இருமலினால் தூக்கம் பிடியாமை, குளிர்ச்சியான வஸ்துவைச் சாப்பிடுகிறதினாலும் பனியில் நனைவதினாலும் உண்டாகும் சாதாரண இருமல் முதலான வியாதிகளை நாலு தினத்தில் இது கண்டித்துக் கோழையை வெளியில் தள்ளி நன்றாய் அவ்வியாதி கொண்டிருந்தவரை தூங்கச் செய்யும்.

புட்டி 1-க்கு விலை ரூபா 1.

# ஜி. கியூர்

## இது 3-தினத்தில் குணப்படுத்தும்

மேக உஷ்ணத்தால் தாது கெட மூலத்தில் அக்னி அதிகரிப்பதனால் கள்ளநோய், நீரடைப்பு, சதையடைப்பு, பவுத்திரம், அரையாப்பு முதலியன இந்த நோயின் மூலமாய் ஏற்படும். நீர்க்கடுப்பும், குத்தலும், எரிச்சலும் காண்பதுண்டு. இவைகளை நீக்கி நல்ல சுகத்தைக் கொடுக்கக் கூடிய அநுபவ மருந்து இது. பத்தியம் கிடையாது. இதனை உபயோகிக்கும் விவரம் மருந்துடன் அனுப்பப்படும்.

புட்டி 1-க்கு விலை ரூபா 1. தபாற்கூலி வேறு.

# மயிர் போக்கும் சோப்



இது ஒவ்வொருவருக்கும் மிகவும் அத்தியாவசியமானது. சரீரத்தில் எந்தப் பாகத்திலுமுள்ள மயிரை இந்த சோப்பின் உதவியால் பிரயாசையின்றி வெகு சுலபமாய் போக்கிவிடலாம். மயிரைப் போக்கவேண்டிய இடத்தில் கொஞ்சம் ஜலத்தைப் பூசி, அதன்மேல் இந்த சோப்பைத் தேய்த்து ஐந்து நிமிஷம் கழித்து காகித கார்டினாலாவது, ஓலைத் துண்டினாலாவது வழித்தால் அவ்விடத்திலுள்ள மயிர் யாவும் கழிந்து போகும். அந்த இடம் பிறகு மழமழப்பாக விருக்கும். இந்த சோப்பில் துர்நாற்றம் முதலியவை இரா.

3-சோப் கொண்ட பாக் 1-க்கு விலை ரூபா 1.

# மயிர் போக்கும் சூரணம்

இந்த சூரணத்தை ஜலத்தில் கலந்து, மயிர் போக்கவேண்டிய யிடத்தில் தடவி உலர்ந்த பின் உடனே 5-நிமிஷம் பொறுத்து கழுவினால் மயிர் போய்விடும். புட்டி 1-க்கு விலை அணு 8.

---

தனலட்சுமி கம்பெனி, நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.

# நூதன தமிழ் நாவல்களும் கதைப் புத்தகங்களும்

ஆரணி-குப்புசாமி முதலியார் இயற்றியவை

| | ரூ. | அ. |
|---|---|---|
| ஞானசெல்வாம்பாள் 5-பாகம் | 9 | 10 |
| கற்பகச் சோலையின் அற்புதக் கொலை ... | 1 | 4 |
| கடற்கொள்ளைக்காரன் 2 பாகம் | 3 | 4 |
| மதனாம்பாள் 2-பாகம் ... | 3 | 0 |
| லோகநாயகி ... | 1 | 0 |
| விளையாட்டுச் சாமான் ... | 1 | 6 |
| பவளாத்வு 2-பாகங்கள் ... | 3 | 0 |
| தபால்கொள்ளைக்காரர்கள் ... | 0 | 14 |
| அமராவதி 2-பாகங்கள் ... | 4 | 0 |
| மஞ்சள் அறையின் மர்மம் ... | 1 | 8 |
| கற்கோட்டை ... | 2 | 0 |
| பூங்கோதை ... | 0 | 10 |
| வீரபாதன் ... | 0 | 12 |
| கனகபூஷணம் 2-பாகமும் ... | 3 | 8 |
| கமலசேகரன் ... | 1 | 12 |
| தினகரசுந்தரி ... | 1 | 0 |
| ரத்தினபுரிரகசியம் 9-பாகமும் | 18 | 2 |
| சந்திராபாய் ... | 2 | 0 |
| இராஜாமணி ... | 2 | 0 |
| இரத்தினபாய் ... | 1 | 12 |
| மதனபூஷணம் ... | 1 | 0 |
| சுவர்ணம்பாள் ... | 0 | 12 |
| தேவசுந்தரி ... | 1 | 4 |
| குணசுந்தரன் ... | 0 | 12 |
| பத்மாஸனி ... | 0 | 14 |
| ஆனந்தஸிங் ... | 2 | 0 |
| மின்சார மாயவன் ... | 1 | 8 |
| ஆனந்தசிங்கின் அஷ்டஜயங்கள் | 1 | 12 |
| அரசூர் இலக்ஷ்மணன் ... | 2 | 0 |
| கைவல்லிய நவநீத வசனம் ... | 1 | 8 |
| சகோதரவாஞ்சை ... | 0 | 7 |

158

| | ரூ. | அ. |
|---|---|---|
| தத்வசங்க்ரஹ ராமாயணம் ... | 4 | 0 |
| ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சருடைய சரித்திரமும் உபதேசங்களும் | 1 | 12 |
| விவேகானந்தர் ... | 4 | 0 |
| தமிழ் மெடீரியா மெடிகா ... | 3 | 0 |
| மாதவி மாதவன் 2-பாகம் ... | 2 | 0 |
| மலையாள பகவதி ... | 1 | 0 |
| அற்புத நவநீத ரம்பை ... | 1 | 0 |
| அகட விகட விலாச விநோதம் | 0 | 10 |
| சீமாட்டி கார்த்தியாயினி ... | 0 | 12 |

| | ரூ. | அ. |
|---|---|---|
| துயரானன் கதை ... | 0 | 12 |
| பூலோக லக்ஷ்மி கதை ... | 0 | 10 |
| கனகரத்தினம் ... | 0 | 8 |
| கண்டிராஜா நாடகம் ... | 0 | 12 |
| நளின சுந்தரி ... | 0 | 10 |
| கம்பராமாயணவசனசங்கிரகம் | 2 | 0 |
| குசேலோபாக்கியான வசனம் | 1 | 0 |
| ஸ்ரீபாலன் ... | 0 | 8 |
| உதயணன் ... | 0 | 7 |
| சுக்கிரீவன் ... | 0 | 14 |
| போஜ சரித்திரம் ... | 0 | 5 |
| ஏகநாதர் ... | 1 | 4 |
| ஜீவகன் வசனம் ... | 1 | 0 |
| கர்ணன் சரிதை ... | 0 | 12 |
| பீஷ்ம விஜயம் ... | 0 | 10 |
| கீர்த்திசிங்கன் ... | 0 | 8 |
| மும்பெருந்தாசர் ... | 0 | 10 |
| அரிச்சந்திரன் சரிதை ... | 0 | 8 |
| நீலக்கொடி ... | 0 | 5 |
| மணவாளன் ... | 0 | 3 |
| பரசுராமன் ... | 0 | 3 |
| சிசுபாலன் ... | 0 | 8 |
| அங்கதன் ... | 0 | 4 |
| தசாவதாரம் ... | 0 | 6 |
| கிருஷ்ணன் தூது வசனம் ... | 0 | 8 |
| சண்டோபாக்யானம் ... | 0 | 6 |
| குருதுரோகரும் சத்தியசீலரும் | 0 | 8 |
| சத்தியவசனி ... | 0 | 4 |
| விமலன் ... | 0 | 4 |
| கண்ணபிரான் ... | 0 | 4 |
| செய்யுட்பாடத்திரட்டு ... | 0 | 4 |
| நாலுமந்திரி கதை ... | 0 | 4 |
| மங்களேசுவரன் ... | 0 | 6 |
| தக்கன் ... | 0 | 6 |
| சீமந்தனி ... | 0 | 8 |
| நான்குகோடி ... | 0 | 4 |
| மதிமோசவிளக்கம் ... | 1 | 0 |
| மெய்க்காதலி ... | 0 | 8 |
| மேனாமினுக்கி கதை ... | 0 | 8 |
| வீரசூரன் ஞானேந்திரி ... | 0 | 8 |
| மனோன்மணி கதை ... | 0 | 8 |
| கோமளவல்லி கதை ... | 0 | 8 |
| விகடவல்லி கதை ... | 0 | 6 |
| தாலிகட்ட மறந்த கதை ... | 0 | 5 |

இந்திர கவசமென்னும் சர்வ தேவதா [illegible]
முதல் பாகமும் இரண்டாம் பாகமும் சேர்ந்தது [illegible] ரூபா 1.

ஆனந்தபோதினி ஆபீஸ், தபால் பெட்டி [illegible] 167, மதராஸ்.

அநேக நற்சாட்சிப் பத்திரங்கள் பெற்ற (ரிஜிஸ்டர்டு.)

# "சகுந்தலா" கூந்தல் வளரும்

# பரிமளத் தைலம்

ஆறுமாதத்து எண்ணெய் அடங்கியது




சீசா 1-க்கு விலை அணா 12.

இத்தைலத்தின் பரிமளம் எவருக்கும் இன்பத்தை யளிக்கும். இது கூந்தலை நீளமாக வளரச் செய்யும். மூளையின் கொதிப்பைத் தணியச் செய்யும். கண்களுககுக் குளிர்ச்சியைத் தரும். சிரசிலுள்ள பல வியாதிகளையும் நிவர்த்தி செய்யும். கண்களில் நீர்வடிதல், தலையில் புண், மயிர்வெடிப்பு, மயக்கம், தலைச்சுற்றல், தேக நமைச்சல், சொறி, சிரங்கு, கற்றாழை நாற்றம், மனோ வியாகூலம், ஞாபகமறதி இவைகளைப் போக்கடித்துத் தேக ஆரோக்கியத்தைத் தந்து வாசனையை உண்டாக்கும். இந்தத் தைலம், பல வனமூலிகைகளால் சாஸ்திரப்படி தயார் செய்யப்பட்டது. இதில் ஒரு டின் தைலம் வாங்கிப் பார்த்தால் இதன் அருமை விளங்கும்.

## மகா சந்தனாதித் தைலம்

வெயிற்காலத்திற்கு அவசியமானது

இந்த தைலத்தைத் தேய்த்துக் கொண்டு வாரத்திற்கு 2 ஸ்நானங்களாக 10 ஸ்நானங்கள் செய்பவர்கட்குத் தீராத பித்தபாண்டு, நாள்பட்ட பழைய சுரம், குளிர்சுரம், 18 வித ஜன்னி, கழுத்திலும் கால்களிலும் உண்டாகும் நோய், அஸ்தி வெட்டை, அஸ்தி சுரம், கபால சூலை, கண்ணெரிவு, கைகாலெரிவு, சொறி, சிரங்கு, நமைச்சல், பீனிசம் முதலிய அனேக நோய்கள் நீங்கி தேகத்திற்கு சுகமுண்டாகும். கவனசக்தியும், கண்களுக்கு நல்ல ஒளியும் உண்டாகும். இப்போது சந்தனாதித் தைலமெனப் பல தைலங்கள் பலரால் வெளிப்படுத்தப்பட் டிருக்கின்றன. நண்பர்கள் அவற்றை வாங்கிப் பரீக்ஷித்துப் பார்த்திருப்பீர்கள். இது அசல் சந்தனத்தைக் கொண்டு மிக்க பணச் செலவிற் செய்யப்பட்டது.

ஒரு சேர் தைலம் ரூபா 1—12—0. அரை சேர் தைலம் ரூபா 1.

---

தனலட்சுமி கம்பெனி, கெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.

Edited, Printed and Published by N. Munisami Mudaliar, at the "Ananda Bodhini Press," No. 6, Lawyer Chinnathambi Mudali Street, Sowcarpet, Madras.